# கல்கி

KALKI 15.1.95
ரூ. 3.00



பொங்கல் ரிலீஸ்
-பம்பர் அறுவடை!

# ஆன்மீகத்திற்கு பொன்னீலன் தரும் புதிய அர்த்தம்!

முதன் முதலாக என்னை ஈர்த்தது அவருடைய அந்தச் சிரிப்புதான். அதன் சொந்தக்காரர், தமது புதிய தரிசனங்கள் நாவலுக்காகச் சாகித்ய அகாடமி விருது பெற்றிருக்கும் பொன்னீலன் ஸ்ரீகண்டேஸ்வர பக்த வத்சலம்.

மறைந்த நா.வானமாமலை மாதந்தோறும் பாளையங்கோட்டையில் ஒரு கூட்டத்தை நடத்தி வந்தார். அதில் இந்திய தத்துவம், மார்க்ஸீயம், நாட்டுப் புறப் பாடல்கள், நவீன இலக்கியப் படைப்புகள் என்று பல்வேறு விஷயங்கள் பற்றிப் பேராசிரியர்களும் எழுத்தாளர்களும் அலசுவார்கள். 70-களில் நடந்த அந்தக் கூட்டம் ஒன்றில்தான் பொன்னீலனைச் சந்தித்தேன்.

குமரி மாவட்டத்திலுள்ள மணிக்கட்டிப் பொட்டல் என்னும் கிராமத்தைச் சேர்ந்த இவர், நடுநிலைப் பள்ளி ஒன்றின் தலைமையாசிரியர். இவரது தமிழ்நடை நாஞ்சில் நாட்டின் இனிமையுடன் கூடியது. 'உறவுகள்' என்னும் இவரது குறுநாவல்தான் 'பூட்டாத பூட்டுகள்' என்று சினிமாவாக எடுக்கப்பட்டது. 'ஜீவா என்றொரு மானுடன்' என்ற அற்புதமான நூலுக்கு இவர்தான் சொந்தக்காரர்.

சமூக அக்கறையைத் தமது எழுத்துக்களில் மட்டுமே காட்டுபவரில்லை, பொன்னீலன். வாழ்விலும் காட்டுபவர் என்பதற்கு, 86-ல் அணு ஆயுதப் போரை எதிர்த்து, கன்னியாகுமரியிலிருந்து சென்னை வரையிலும் நடத்தப்பட்ட பாதயாத்திரைக் குழுவுக்குத் தலைமை தாங்கியதே சாட்சி.

“சமூகத்தில், பொருளாதாரம், அரசியல் ஆகிய இரண்டையும் அடக்கி ஆட்சி செய்து வழி நடத்தும் தளமாக ஆன்மீகம் இருக்க வேண்டும்!” என்று கூறும் இவர், ஆன்மீகத்திற்குக் கொடுக்கும் அர்த்தமே வேறு. ஆன்மீகம் என்று இவர் குறிப்பிடுவது பண்பாட்டை. பண்பாடு என்பது ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பதும் சுயநலத்தைத் துறப்பதும் என்பதே இவர் அகராதி.

இவரிடமுள்ள இன்னொரு சிறப்பு, இவரது எழுத்துக்களைப் பற்றிக் கடுமையாக

---

கன்னட மொழி இலக்கியத்துக்கான ஞானபீடப் பரிசை பெறும் ஆறாவது எழுத்தாளர் யு.ஆர். அனந்தமூர்த்தி. நாவல்கள், சிறுகதைகள், விமர்சனக் கட்டுரைகள் எழுதிவரும் ஆங்கிலப் பேராசிரியர். எழுதுவதோடு இல்லாமல் சமூக பிரச்னைகளிலும் நல்ல இலக்கியத்தைப் பிரபலப்படுத்துவதிலும் தீவிரமான ஈடுபாடு கொண்டவர்.

அவரின் பிரபலமான நாவலான 'சமஸ்காரா' சம்பிரதாயத்தையும் ஐதீகத்தையும் நவீனத்தன்மையோடு ஆராய்கிறது. அதனை ஏ.கே.ராமானுஜம் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். தமிழிலும் ஒரு மொழி பெயர்ப்பு உண்டு.

தாய்மொழியில்தான் படிப்பும், படைப்பும் இருக்க வேண்டும் என்று வலியுறுத்திச் சொல்லி வருபவர் அனந்தமூர்த்தி. சில ஆண்டுகளுக்கு முன்னால் கர்நாடகத்தில், தமிழர்களுக்கு எதிராகச் சில எழுத்தாளர்கள் கூச்சலிட்டனர். அப்போது தமிழர்களை ஆதரித்துப் பேசியவர் அனந்தமூர்த்திதான். “வீட்டில் தமிழ்பேசும் மாஸ்தி வேங்கடேச ஐயங்காரை விட, வேறு யாரும் கன்னட மொழிக்குப் பெரிதாக ஒன்றும் செய்து விடவில்லை” என்று சொல்லி கூச்சலை அடக்கினார். ஓர் உண்மையான இலக்கியவாதிக்குரிய பரந்த சிந்தனை இது.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் பெங்களூரில் நடைபெற்ற சாகித்ய அகாடமி தமிழ் ஆலோசனைக்குழு கூட்டத்தில் பேசும்போது குறிப்பிட்டார்: “பெங்களூரில் திருவள்ளுவர் சிலையைத் திறக்க ஏற்பாடு செய்தவர்கள் அதனைத் திறந்து வைக்க பங்காரப்பாவை அழைத்ததால் அது அரசியலாகி விட்டது. திருவள்ளுவர் எல்லோருக்

• அனந்தமூர்த்தி



# ஞானபீடத்தில் அனந்தமூர்த்தி!



• பொன்னீலன்

விமர்சனம் செய்பவர்களையும் நல்ல நண்பர்களாக ஏற்றுக் கொண்டு பழகுவது.

"சர்வாதிகாரம் என்பது எந்தவிதமான ரூபத்தில் எழுந்தாலும் அது சமூகத்தை அழிக்கும் தர்மதுரை என்பதே 'புதிய தரிசனங்கள்' விடுக்கும் செய்தி" என்கிறார் பொன்னீலன். நாவலின் தகுதி பற்றி அபிப்பிராய பேதங்கள் இருந்தாலும் பொன்னீலன் தகுதி பற்றி யாருக்கும் மாறுபட்ட அபிப்பிராயம் இருக்க முடியாது.

**- வண்ண நிலவன்**

கும் பொதுவானவர். அவர் சிலையைத் திறந்து வைக்க பூர்த்தி நரசிம்மலு போன்ற இலக்கியவாதிகளை அழைத்திருக்க வேண்டும். பிரச்னையே இருந்திருக்காது."

நரசிம்மலு, தமிழ் பேசும் கன்னட அறிஞர்.

**மை**சூர் பல்கலைக்கழக ஆங்கில பேராசிரியராகப் பல ஆண்டுகள் பணியாற்றிய அனந்த மூர்த்தி அதை விட்டுவிட்டு தன்னாட்சிப் பல்கலைக் கழகமான கோட்டயம் மகாத்மா காந்தி பல்கலைக் கழகத்தின் துணைவேந்தரானார்.

அனந்தமூர்த்தி அகாடமி தலைவரான போது, 'சாகித்ய அகாடமி பரிசு பெறாத எழுத்தாளர் அதன் தலைவராகி விட்டாரே!' என்று சில பத்திரிகைகள் எழுதின. ஆனால் அவர் அகாடமி தலைவரானதும் அதன் சட்ட திட்டங்களில் மாறுதல்களை ஏற்படுத்தி அதன் மதிப்பை நிலை நிறுத்த முயற்சி எடுத்துக் கொண்டார்.

மிகவும் குறைவாக எழுதி மிக மிக உயர்வான விருதைப் பெற்றுள்ளவர் அனந்த மூர்த்தி.

**- சா.கந்தசாமி**

# மோட்டார் சைக்கிள் பரிசுப் போட்டி – 19

**க**வர் ஸ்டோரியில் பொங்கல் ரிலீஸ் படங்கள் பற்றிய விவரங்கள் பார்க்கலாம். உங்கள் ஞாபகக் கேஸட்டைக் கொஞ்சம் ரீவைண்ட் பண்ணுங்கள். இந்த இதழின் வெவ்வேறு பக்கங்களில் 1991, 92,93,94 வருஷ ஆறு பொங்கல் ரிலீஸ் படங்களின் பெயர்கள் ஒளிந்து கொண்டிருக்கின்றன. அவற்றைத் தேடி எடுத்து, கூப்பனில் குறிப்பிட்டு, 26 வார முடிவில் மொத்தமாக அனுப்புங்கள். அதிகப் போட்டிகளில் கலந்துகொண்டு, அதிக வெற்றி பெறுபவருக்கு மோ.சை. பரிசு. தவிர ஆறுதல் பரிசுகள். ஆசிரியர் தீர்ப்பே முடிவு

## போட்டி – 19

**தேடி எடுத்த ஆறு படங்கள்:**

1. ........................................
2. ........................................
3. ........................................
4. ........................................
5. ........................................
6. ........................................

பெயர்: ........................................

விலாசம்: ........................................

........................................

........................................


மேனேஜரோட சம்சாரம்தான் ரெகமண்ட் பண்ணிச் சேர்த்தாங்களாம்!
சிரிப்பாரிசு!
L.K.G
"சிபாரிசு கடிதம் வாங்கிட்டு வந்தாலே, அவங்க நல்லா வேலை செய்ய மாட்டாங் கன்னு மேனேஜர் எரிஞ்சு விழுவார்!"
எங்க பப்லுவுக்கு ஜே. ஜே. சரசாதான் டான்ஸ் சொல்லித் தராங்க. நீங்க எப்படி யாவது சிபாரிசு பண்ணி வேணுகான சபா வுல சான்ஸ் வாங்கிக் குடுத்துடணும்!
"ஏன்?"
"அவரே ரெகமன்டேஷன்ல வந்தவர் தானே!"




• குல்தா, ஜாம்பஜார் ஜக்கு, மலர், மேதை



# TV - 94

## ஒரு மினி சர்வே

ஐம்பது சதவிகித ரசிகர்களின் பிடித்த நிகழ்ச்சி பட்டியலில் 'பிடிவாதமாக' இடம்பிடித்துள்ளது இந்த நிகழ்ச்சி. (ஒரே ஒருவர் மட்டுமே 'வர வர போர் அடிக்கிறது; என்றாலும் பார்க்கிறேன்' என்று கமென்ட் அடித்தார்!)

அடுத்த இடத்தைப் பெறும் நிகழ்ச்சி சோதனை. நமது 'மினி சர்வே'படி நூற்றில் 27 பேர் விரும்பிப் பார்க்கும் நிகழ்ச்சி இது. அவர்களுள் ஒன்பது பேர் இதை மிகவும் பிடித்த நிகழ்ச்சி என்று முதல் இடத்தில் வைக்கிறார்கள்.

மூன்றாவது இடத்தை நான்கு நிகழ்ச்சிகள் பகிர்ந்து கொள்கின்றன :



## 'பிடிவாதமாகப்' பெற்ற இடம்!

"கடந்த வருடத்தில் நீங்கள் மிகவும் ரசித்த டி.வி. நிகழ்ச்சிகள் ஐந்தை முறையாக வரிசைப்படுத்துங்கள்" என்று டி.வி. ரசிகர்களைக் கேட்டோம். சென்னை நகரின் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த அந்த நூறு ரசிகர்களின் தீர்ப்புப் படி முதலிடம் பெறுவது ஜுனூன்! பதினெட்டு பேர் இந்த நிகழ்ச்சிக்கு முதலிடம் கொடுத்துள்ளார்கள். தவிர,

- செய்திகள்
- ஒளியும் ஒலியும்
- நேருக்கு நேர்
- ஐ விட்னஸ்

இவற்றுள் ஒவ்வொன்றும் ஐந்து ரசிகர்களின் பட்டியலில் முதலிடம் பெறுகின்றன. கருத்துக் கணிப்பில் தையல்காரன் கலந்து கொண்டவர்களுள் 19 பேர் செய்திகளை விரும்பிப் பார்ப்பதாகக் குறிப்பிட்டுள்ளார்கள். ஒளியும் ஒலியும் 18 பேரின் பட்டியலில் இடம்பிடித்துள்ளது; ஐ விட்னஸ் 11 பேரைக் கவர்கிறது; நேருக்கு நேர் நிகழ்ச்சியை 7 பேர் விரும்பி ரசிக்கிறார்கள்.

கருத்துக் கணிப்பில் உதவியவர்களுக்கு நன்றி!

---



## அடுத்த இதழில்...

- ராவுக்குப் பின்...?
  — கவர் ஸ்டோரி

# சர்வோ® ஸ்ரீவனை அதிகரிக்கும்.

# மெக்கானிக்குகள்



# கூறுகிறார்கள்.




**சர்வோ®:** தொல்லையில்லாத எஞ்ஜின் ஆயில் அளிப்போர் - இந்தியன் ஆயில்

**சர்வோ** இலட்சக்கணக்கான இந்திய மெக்கானிக்குகளால் நம்பிக்கையுடன் சிபாரிசு செய்யப்படுகிறது. ஏனென்றால் **சர்வோ** எஞ்ஜினின் தேய்மானத்தைக் குறைக்கிறது. பராமரிப்புச் செலவைக் குறைக்கிறது. எஞ்ஜினின் ஆயுளை அதிகரிக்கிறது. மற்ற எந்த எஞ்ஜின் ஆயிலும் இதற்கு இணை இல்லை.

வேறெவரைவிடவும் மிக அதிக அளவில் உயர்தரத்திறனுள்ள 400 க்கும் மேற்பட்ட லூப்ரிகன்ட்களையும் கிரீஸ்களையும் **சர்வோ** வழங்குகிறது.

**சர்வோ** - பரிதாபாத்திலுள்ள ஆசியாவின் மிக முன்னேற்றமடைந்த ஆர் & டி சென்டரிலுள்ள நமது இந்திய விஞ்ஞானிகளால் உருவாக்கம் செய்யப்பட்டது.




**சர்வோ®:** இந்தியாவில் மிக அதிக அளவில் விற்பனையாகும் எஞ்ஜின் ஆயில்.

IOC-284/94 TAM B

# Kalki Shopping Page



கல்கி



1995
ஜனவரி 15
பவ
தை 1
மலர் : 53
இதழ் : 24

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

# யாதும் 'ஜெ'யே! யாவரும் கேளீர்!

ஒரு தமிழ் மாநாடு எப்படியெல்லாம் நடக்கக் கூடாது என்பதற்கு முன்னுதாரணமாகத் திகழ்கிறது தஞ்சையில் நடந்து முடிந்த உலகத் தமிழ் மாநாடு. தமிழ் மகாநாட்டினை, அறிஞர் பெருமக்கள் கலந்து கொள்வதாக மட்டுமின்றி, மக்கள் விழாவாகவும் நடத்த முற்பட்டதில் தவறில்லை. ஆனால் அ.தி.மு.க. கட்சி மாநாடாகவும் 'ஜெ' புகழ் பாடும் விழாவாகவும் நடத்தியது கண்டனத்துக்குரியது. தமிழ் மாநாட்டின் முக்கிய நோக்கம் ஊர்வலங்களும் கலை நிகழ்ச்சிகளும் அல்ல. தமிழ் வளர்ச்சிக்காக ஆக்கபூர்வமான பணிகளைச் செய்வதே. அதை இந்த மாநாடு எந்த அளவுக்கு நிறைவேற்றியது என்று பார்த்தால் ஏமாற்றமே உண்டாகும்.

ஏற்பாடுகளில் ஏகப்பட்ட கோளாறுகள். துணை ஜனாதிபதி விளக்கு ஏற்ற முற்பட்டால் குத்துவிளக்கையே காணோம்! அயல்நாட்டுப் பிரதிநிதிகள் இங்குமங்குமாகப் பல்வேறு ஓட்டல்களுக்குப் பந்தாடப்பட்டனர். உள்நாட்டுத் தமிழறிஞர்கள் பலர் கைது செய்யப்பட்டனர். அயல்நாட்டுத் தமிழறிஞர்கள் பலர் இடத்தைக் காலி பண்ணி ஊருக்குத் திரும்புமாறு விரட்டப்பட்டனர். ஆளுனர், கல்வி அமைச்சர், தஞ்சைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் ஆகியோரை மேடையில் காணோம்! கவிதை நிகழ்ச்சி, முதல்வரைத் துதிபாடும் நிகழ்ச்சியாக மாற, அடுத்த நிகழ்ச்சி ஒரு மணி நேரம் காலதாமதமாகிப் போக, மலேசிய மந்திரி சாமிவேலு, "காலத்தோடு காரியங்களைச் செய்யப் பழகாத நாம் தமிழை எப்படி வளர்க்கப் போகிறோம்?" என்று கேட்டே விட்டார். இதைவிடத் தமிழனுக்குத் தலைகுனிவு வேறென்ன வேண்டும்? உபயம் : 'ஜெ'.

மக்களின் வரிப்பணம் கோடிக்கணக்கில் வாரி இறைக்கப்பட்டும் புதிய ஹோட்டல்கள் இயங்க ஆரம்பிக்கவில்லை; நினைவு மண்டபம் மக்களின் துயில் மண்டபமாக மாறியது. வந்தவருக்கெல்லாம் ஒரு ரூபாய் சாப்பாட்டுப் பொட்டலம் என்பது பொய்யானது. உற்பத்திக்கு உதவ வேண்டிய மக்களின் வரிப்பணத்தை அதிகார துஷ்பிரயோகத்தினால் வரம்பின்றி வீணடித்த சம்பவம் இதை விடவும் ஒன்றை வரலாற்றில் காண முடியாது. இத்தகைய ஒரு டாம்பீக, ஜெ. வளர்ச்சி விழாவுக்குப் பிரதமர் வராமலிருப்பதுதான் சரி. வாழப்பாடி கூறுகிற காரணங்களுக்காக அல்லாவிட்டாலும் மன்மோகன் சிங்கைக் கேட்டால் காரணங்களை அடுக்குவார். ஆனால் காங்கிரஸில் விரிசல்களைச் சந்திக்க ஆரம்பித்துள்ள பிரதமர், ஜெ. ஆதரவை நாடாளுமன்றத்தில் இழக்க விரும்பாமல் தாமும் தம் பங்குக்கு துதிபாடி விட்டுப் போயிருக்கிறார் - ஐயோ பாவம்!

தமிழ் வளர்ச்சிக்கு என கூறப்பட்ட யோசனைகளுள் "தமிழை விஞ்ஞான மொழியாக்க வேண்டும்" என்ற முதல்வரின் கருத்து சரியானது. ஆயினும், அதற்கான ஆக்கபூர்வமான யோசனையைச் சொன்னவர் ஆர்.வி. "ஆங்கில விஞ்ஞான வார்த்தைகளை அப்படி அப்படியே தமிழ் ஏற்றுக் கொண்டு விடட்டும் - ஆங்கிலம் துரிதமாக வளர்ந்ததே இவ்வாறுதான்" - என்ற ராஜாஜியின் கருத்தைத்தான் ஆர்.வி. பிரதிபலித்தார் என்றாலும், சரியான தருணத்தில் ஞாபகப்படுத்தினார். ஆனால் நம் தமிழ் பண்டிதர்கள் இதை அனுமதிக்க மாட்டார்கள். அகராதிக்கு மேல் அகராதியாக தயாரித்துக் குவிக்க, அடுத்தடுத்து ஆட்சிக்கு வரும் ஒவ்வொரு அரசும் கமிட்டி அமைத்து, மான்யம் வழங்கி, கமிட்டியில் இடம்பெறுவோருக்கு கார், பங்களா, சம்பளம் என்று வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்து மக்களின் வரிப் பணத்தை வீணடிப்பதுதான் மிச்சம். தமிழ் வளராது. ஒவ்வொரு கமிட்டியும் வெவ்வேறு தமிழ்ச் சொற்களை உருவாக்க, குழப்பம்தான் அதிகரிக்கும்.

இந்தத் தமிழ் மாநாட்டில் நடந்த ஒரே உருப்படியான காரியம் மாநில அளவில் எல்லாப் பள்ளிகளுக்கும் ஒரு வாரம் லீவு விட்டதுதான். கிறிஸ்துமஸ் லீவுடன் இதுவும் சேர்ந்து கொள்ள, குழந்தைக் குலத்துக்கு ஒரே குதூகலம்! ஏதோ, குழந்தைகளின் சிரிப்பிலாவது தமிழை (தமிழன்னையை என்று கூறத் தயக்கமாயிருக்கிறது!)க் காண்போம்!



தங்கம் வாங்க இதனை விட
சிறந்த சேமிப்புத்திட்டம் உள்ளதா ?

# சாந்தி கோல்டு ஹவுஸ்

## தி. நகர்

அறிமுகப்படுத்தும்

# கோலார்

## சே மி ப் பு த் தி ட் ட ம்

### கோலார் சேமிப்புத் திட்டம்

* மாதம் ரூ 500 /- வீதம் 24 மாதங்கள்
* நாங்கள் அளிக்கும் போனஸ் ரூ 2,700 /-
* 24வது மாத முடிவில் நீங்கள் ரூ 14, 700 /- (போனஸ் ரூ 2,700 /- சேர்த்து) பெறுமானமுள்ள தொகைக்கு விருப்பப்பட்ட டிசைன்களில் நகைகளை தேர்ந்து எடுத்துக் கொள்ளலாம்

### நீங்கள் பெறும் சலுகைகள்

செய்கூலி, சேதாரம் இல்லை. அமெரிக்கன் டைமண்ட், பவளம், முத்து இலவசம். விற்பனை வரியும் நாங்களே செலுத்துகிறோம்.

### சிறப்பு சலுகைகள்

* தங்கம் விலையில் தினசரி மாறுபாடுகள் இருப்பினும் இத்திட்டத்தில் சேரும் நாள் / முடியும் நாள் இதில் எந்த விலை குறைவாக உள்ளதோ அதன்படி கணக்கிடப்படும்.
* திட்டத்தில் சேரும் உறுப்பினர்களுக்கு 30 கிராம் எடையுள்ள வெள்ளி குத்துவிளக்கு பரிசாக தரப்படும்.
* "கோலார்" சேமிப்புத்திட்டம் மற்ற திட்டங்களைவிட வாடிக்கையாளர்களுக்கு அதிக லாபம் தரக்கூடிய திட்டமாகும்

ஆரம்ப நாள் 5 – 1 – 95 முடிவு நாள் 29 – 1 – 95

* இந்த அரிய பொன்னான வாய்ப்பினை பயன் படுத்திக் கொள்ளுங்கள் .
* சாந்தி கோல்டு ஹவுஸுக்கு வருகை தாருங்கள்
* "கோலார்" சேமிப்பு திட்டத்தில் உறுப்பினர் ஆகுவீர்
* நன்மைகள் பல பெறுவீர்

## சாந்தி கோல்டு ஹவுஸ்

72, உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை – 600 017. போன் : 4341730

Image Creation

# ஒரு கண்ணோட்டம்:

**த**மிழ் மாநாடு எப்படி நடந்திருக்கும் என்று நினைக்கிறீர்கள்? 'எங்கும் தமிழ், எதிலும் தமிழ்' என்று முழங்கியிருப்பார்கள் என்று எண்ணினால் - ஸாரி. 'எங்கும் ஜெ, எதிலும் ஜெ' என்பது தான் தாரக மந்திரமாக இருந்தது!

- தஞ்சைக்குள் நுழையும் போதே ஓரே ஜோதி மயம்! பத்தடிக்கு ஒரு குழல் விளக்கு. தவிர வழக்கம் போல் கட்-அவுட் புரட்சி. (திருவள்ளுவரும், பாரதியும் எக்கச்சக்கமாய் ஊதிப்போயிருந்தார்கள், கட்-அவுட்களில்)

- ஊருக்குள் வாகனங்களுக்கு அனுமதி இல்லை. எல்லோரும் நடராஜா சர்வீஸ்தான். இடுப்பு வலியும், மூட்டு வலியும் இன்றிப் பிழைத்தவர்கள் அநேகமாக அமைச்சர்கள் மட்டுமே!

- மக்களுக்கு ஏக பீதி. காரணம், எக்கச்சக்கமான போலீஸ், மிலிட்டரி. வீடுகளின் மேலெல்லாம் அதி நவீன ரகத் துப்பாக்கிகளோடு மிலிட்டரி நின்றிருந்தது. அங்கங்கே மிலிடரி டாங்குகள் வேறு!

- பெரிய கோவிலில் நாட்டிய விழா என்று தான் பெயர். அங்கே சாப்பாட்டு விழாதான் நடந்தது. தவிர, டூரிஸ்ட் வண்டிகளில் வந்தவர்கள் ஒய்வுடன் உறக்கம் கொள்ள, வெகு சௌகர்யமான விசால இடம். யார் கவனித்தார்கள், நாட்டியத்தையும் இன்னொன்றையும்?

- புது பஸ் ஸ்டான்ட் கட்டியிருக்கிறார்கள். ஊரிலிருந்து ஐந்தாறு கிலோ மீட்டர்கள் தள்ளி. ஆட்டோக்காரர்கள் காட்டில் அடைமழை. சகட்டு மேனிக்குத் தீட்டிவிட்டார்கள் தீட்டி.

- தமிழ் மாநாட்டுக்காகப் பல பதிப்பகங்கள் நிறைய புதிய புத்தகங்களை வெளியிட்டுள்ளார்கள். ஆனால்

• ஸ்பெஷல் பாதுகாப்புடன் சசிகலா





• விழா மேடையில்...

# உ.த. மாநாடு...

புதிய புத்தகங்களை வெளியிட்டுள்ளார்கள். ஆனால் விற்பனை? "புக் எக்ஸிபிஷன் இருக்குன்னே நிறைய பேருக்குத் தெரியாது. அதனால் விற்பனை டல்தான்" என்றார் 'வேர்கள்' மு.ராமலிங்கம். 'நல்ல விற்பனை' என்றது என்.சி.பி.எச். நாம் பார்த்த வரை கடைசி இரு தினங்களில் விற்பனை ஓரளவு நன்றாகவே இருந்தது.

• தமிழ் மாநாட்டுக்காக அமைத்த மிதவைப் பாலம் இப்போது டூரிஸ்ட் சென்டர் ஆகிவிட்டது. பாலத்தைப் பார்க்கவென்றே ஸ்பெஷல் பஸ்களும் விடப்பட்டிருந்தன. ஆனால், இந்த மிதவைப் பாலம்தான் போக்குவரத்து நெரிசலுக்கு பெரிய காரணமாகவும் இருந்தது. சாதாரணமாய் தஞ்சையிலிருந்து கும்பகோணத்துக்கு பஸ்ஸில் 45 நிமிடங்களே ஆகும். இப்போது ஆனது நாலரை மணிநேரம்.

• பேச்சுக்களில் வந்து விழுந்த ஜெ. நாமகரணங்களை எண்ண முடிந்தவர்களுக்கு கின்னஸ் புத்தகத்தில் நிச்சயம் இடம் உண்டு.

• முதல் நாளும் கடைசி நாளும் 'அழைத்து' வரப்பட்டவர்கள் எண்ணிக்கையே தமிழ் ஆர்வலர்களைவிட அதிகம். நாலாம் தேதி காலையிலேயே மந்திரிகள் கூழாம் தத்தமது ஊர்களுக்கு ஆள் பிடிக்கச் சென்று விட்டதாக உரக்கவே கிசுகிசுத்தார்கள்!

• மாநாட்டு அரங்கத்தில் என்ன பேசுகிறார்கள் என்று கேட்பதைவிட, திருவாளர் பொது ஜனத்துக்கு கவலையெல்லாம், "ஜெயலலிதா இருக்காங்களா? எங்க இருக்காங்க?" மேடையைச் சுற்றி அத்தனை செக்யூரிட்டி!

தஞ்சையிலிருந்து :
**துளசி**

படங்கள்–
நன்றி:
**தினமலர்**



• எந்த மீசை...



• ...பெரிது?



• "ஏழைகளின் நண்பன்"



• நீக்கப்படுவாரா?



• "பிரதமருக்குப் பொருந்தாது!"

● எஸ். நாகராஜன், மேலப்பாதி.

*? உலகத் தமிழ் மாநாடு திருப்திதானே?*

! ஆள்வோருக்குத் திருப்தி. வரி செலுத்தும் நமக்கெல்லாம் திருப்பதி!

● செல்வி கலையரசி, சென்னை □

*? வீரப்பன் மீசை, தேவாரம் மீசை இரண்டில் எது பெரியது?*

! பிணைக் கைதிகள் மீட்கப்பட்ட போது தேவாரம் மீசை பெரிது; வீரப்பன் தப்பி விட்டபோது வீரப்பன் மீசை பெரிது!

● டி. சந்திரன், ஈரோடு.

*? அமரர் கல்கி ஒரு தொடர்கதையைப் பாதி எழுதும்போது அமரர் ஆக, மீதிக் கதையை இந்துமதி எழுதி முடித்ததாக என் சிறிய தாயார் கூறுகிறார்?*

! "அமரதாரா" தொடர் 10-15 அத்தியாயங்களோடு நின்று விடுமோ என்ற ஏக்கத்தைத் தீர்த்து வைத்து அதைப் பூர்த்தி செய்தவர் "கல்கி" யின் மகள் ஆனந்தி. "அமரதாரா" ஒரு சினிமாவுக்காக உருவான கதை என்பதால் அதிர்ஷ்டவசமாக அதற்குக் குறிப்புகள் இருந்தன. (ஐந்து வருஷங்கள் தொடர்ந்த பொன்னியின் செல்வனுக்குக் கூட 'கல்கி' குறிப்புகள் எழுதியதில்லை!) "இந்துமதி" என்பது அந்த நாவலின் கதாநாயகியின் பெயர்.

● இர. ரூபன், கோபாலசமுத்திரம்.

*? வண்டியில் என் பலகை தமிழில் (எழுத்து) மாட்டுவதானால்...?*

! குழப்பம்தான் மிஞ்சும். தமிழை இதனாலெல்லாம் வளர்த்து விட முடியாது. உருப்படியாக ஏதும் செய்யத் தெரியாத வீணர்களின் வேலை.

● ச. ஜான்ரவி, கோவில்பட்டி.

*? "நக்சலைட்டுகள் ஏழைகளுக்கு நண்பர்கள்; நானும் ஏழைகளின் நண்பன்" என்று ராமதாஸ் கூறுகிறாரே?*

! இவர் மட்டுமென்ன, ஏழைகளுக்கு உதவுவதாகக் கூறிக் கொண்டு ஏழைகள் மீது முதுகுச்சவாரி செய்யாத அரசியல்வாதியே கிடையாது.

● கே. பருவதா, கோவில்பட்டி.

*? காங்கிரஸ் கட்சியிலிருந்து அர்ஜுன்சிங் நீக்கப்படுவாரா?*

! அர்ஜுன்சிங் அதற்காகத்தானே காத்துக் கொண்டிருக்கிறார்! ராவ் புத்திசாலியாக இருந்தால் அந்த நடவடிக்கையை எடுக்க மாட்டார். கட்சிக்குள் கருத்துச் சுதந்திரத்தை அனுமதிப்பது போல் காட்டிக் கொண்டு சமாளிப்பார்.

● க. அவிநாசியப்பன், சூலூர்.

*? உலகத் தமிழ் மாநாட்டில் யுனெஸ்கோ கூரியருக்கும், பி. பி. சிக்கும் சிறப்பு விருது வழங்குவதன் மூலம் தமிழ்ச் சமுதாயம் பெருமை அடைகிறதுதானே?*

! ஸ்மிதாவுக்கு "சிலுக்கு" என்ற பட்டம் சூட்டப்பட்ட வரலாறு ஆராயப்பட்டது போல், எத்தனையோ பல சிறுமைகளுக்கு இடையில் இந்தப் பெருமைக்காகத் தலை, நிமிர மறுக்கிறதே!

● தென்றல் கார்த்தி, நாட்டரசன்கோட்டை.

*? "ஒரு நபருக்கு ஒரு பதவி என்ற கோட்பாடு பிரதமருக்குப் பொருந்தாது" என்று கருணாகரன் தெரிவித்துள்ளாரே?*

! கட்சித் தலைவர் பதவி என்பது பிரதமர் பதவிக்கு ஒரு படிக்கல்

**ரத்தத்தால் ஜெ. படம் வரைந்த உசைனிக்கு மூன்று லட்சமாமே?**

**நீங்கள் கேட்டவை**

**- தராசு**







• நாகரிகம்.... • ....அநாகரிகம் • “காமராஜர் திட்டம்” • ராஜினாமா • மறைவு

என்று கருதப்படுவதால் நம்மைக் கவிழ்த்து விடுவார்களோ என்ற அச்சத்தைப் பிரதமர் உதறிவிட்டால் நாளைக்கே இந்தக் கோட்பாடு அவருக்கும் பொருந்திவிடும்.

● **வாஜுமாமலைப் பெருமாள், பெத்தரெங்கபுரம்.**

*? இன்றைய அரசியலில் எது நாகரிகம்? எது அநாகரிகம்?*

! தம் மீது சந்தேகத்தின் நிழல் விழுவதாகத் தெரிந்ததுமே ராஜினாமா செய்த ஏ. கே. அந்தோணியின் செயல் நாகரிகம். “முன்னாள் எம்எல்ஏ.” என்று விலாசமிட்டுக் கலைஞருக்கு அழைப்பு அனுப்புவதும் பதிலுக்கு இவர், “முன்னாள் நடிகை” என்று இடித்துரைப்பதும் அநாகரிகம்.

● **மா. பழனிச்சாமி, கோவை.**

*தனது இரத்தத்தால் ஜெ. படத்தை வரைந்த உசைனியின் கராத்தே பள்ளிக்கு முதல்வர் மூன்று லட்சம் நிதி வழங்கியுள்ளாரே?*

! எத்தனையோ தவறான முன்னுதாரணங்களில் ஒன்று. வீரத்தை முதல்வர் பாராட்டலாம்; கோரத்தை அல்ல. இனி லட்சம் பெற அவரவரும் ரத்தக் கையெழுத்துப் போட முன்வருவார்கள்!

● **பாரதி முருகன், மணலூர்பேட்டை.**

*? “காங்கிரஸுக்கு வசீகரமான தலைமை இல்லை” என்று அர்ஜுன்சிங் கூறியிருக்கிறாரே?*

! ஜனநாயக அரசியலில் தலைமைக்கு வசீகரம் முக்கியமானது அல்ல. திறமை, நேர்மை, நல்லொழுக்கம் இவைதாம் முக்கியம். வசீகரம் வோட்டுக்களைப் பெற்றுத் தரலாம். நல்லாட்சியை வழங்கும் என்ற உறுதி இல்லை. தலைவனுக்காக அன்றி, கட்சிக்காக, கட்சிக் கொள்கைகளுக்காகச் சிந்தித்து வோட்டுப் போடும் போதுதான் ஜனநாயகம் உருப்படும். ஆனால் இன்று வில்லன் ஹீரோதான் அல்லது வில்லி ஹீரோயின்தான் ஃபேஷன் என்றாகிவிட்டதே?

● **பி. என். ஜெய்சங்கர், திருவாரூர்.**

*? “நேரு காலத்தில் பலர் பதவி விலகி காமராஜர் திட்டம் கொண்டு வரப்பட்டது போல் காங்கிரஸில் மீண்டும் புதிய மாற்றம் கொண்டு வர இதுவே சரியான தருணம்” என்கிறாரே சி. எஸ்?*

! காமராஜர் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றி வைக்க அன்று ஒரு காமராஜர் இருந்தார். இன்று அத்தகையதொரு தன்னலமற்ற தலைவர் எங்கே இருக்கிறார்?

● **லீலா இராம், தக்கலை.**

*? என். டி. திவாரி, உ. பி. அரசுக்கு எதிராகக் கொடி உயர்த்துவதில் காங்கிரஸ் தலைமையையும் பகைத்துக் கொள்கிறாரே?*

! உ. பி. காங்கிரஸ் தலைவர் பதவியை ராஜினாமாவே செய்துவிட்டார். மோசமான ஆட்சியானாலும் அதை இடையில் கவிழ்ப்பது அதைவிட மோசமான செயல் என்று ராவ் கருதுகிறார் போலும். ‘ஆட்சியைக் கவிழ்த்துத் தேர்தலைச் சந்திப்பதே காங்கிரஸ் பலப்பட வழி’ என்று திவாரி எண்ணுகிறார். முழு ஆட்சிக் காலமும் நீடிக்கவிட்டுப் பிறகு மக்கள் தீர்ப்பைக் கோருவதே முறை. அதேசமயம், காங்கிரஸ் முழு ஆதரவு என்றில்லாமல் பிரச்னைகளில் தேர்ந்தெடுத்த ஆதரவு என்று அறிவிக்கலாம். அது ஆட்சியை நல்வழிப்படுத்த உதவும்.

● **எஸ். தனசேகரன், தூத்துக்குடி.**

*தினகரன் நிறுவனர் கே. பி. கந்தசாமி மறைவு...?*

! தினகரன் நாளிதழின் புதிய புதிய பதிப்புக்களைக் கொணர்வதில் வெற்றிக்கு மேல் வெற்றி கண்டவர். தி. மு. க. அமைச்சரவையில் அறநிலையத் துறை அமைச்சர். சன் பேப்பர் மில்லில் பத்திரிகைக் காகித உற்பத்தியைப் பல மடங்காக்கியது சாதனை. வை.கோ. கட்சியில் சேர்ந்தது பலருக்கும் வேதனை.

● **கே. சஞ்சீவி பாரதி, அவ்வையார்பாளையம்.**

*? அர்ஜுன்சிங்....?!*

! நேற்றுவரை ஊழலுக்குப் பொறுப்பு ஏற்கப்பட வேண்டும் என்று முழங்கியவர், திவாரியுடன் கலந்து ஆலோசித்தது .... அதே கூட்டத்துக்குக் கல்பனாத் ராயையும் அழைத்தது ? அர்ஜுன் சிங்கின் சீடராகக் கருதப்படும் இன்றைய மத்தியப் பிரதேச முதல்வர் திக்விஜய்சிங், அர்ஜுன்சிங்கின் போக்கை ஏற்காதது ! உங்களுடைய தொடர் புள்ளிக்குறி, கேள்விக்குறி, ஆச்சர்யக்குறி ஆகிய மூன்றுக்கும் விடை கிடைத்துவிட்டதா?

☐ ரூ. 25. பரிசு பெறுபவர் :
செல்வி கலையரசி,
3, 18 வது அவின்யூ,
அசோக் நகர்,
சென்னை - 600 083.

# உங்கள் குழந்தைகளுக்கு நீங்கள் அனைத்திலும் சிறந்ததையே அளிக்கிறீர்கள்...



## ...ஆனால் அது மட்டும் போதுமா?

குடும்பத்தினர் எனும்போது, அனைத்திலும் சிறந்தவற்றையே அளிக்க விரும்புவீர்கள். அவர்களின் ஆரோக்கியத்திலும், உடல்நலனிலும் பெரும் அக்கறை எடுத்துக்கொள்வீர்கள். ஊட்டச்சத்துக்கள் நிறைந்த சுவையிக்க உணவைத் தயாரிக்க பெரும்பாடு படுவீர்கள். ஆனால் இத்தனை அன்பு அக்கறையை மீறி அன்றாட ஆரோக்கியத்திற்கு மிக அவசியமான ஒன்று உங்கள் கவனத்திலிருந்து தப்பிவிடும். அதுவே, குடிநீர்!

**நோய்களில் 80%, தண்ணீரினால் பரவுகின்றன என்பதை அறிவீர்களா?**
ஒரு கோப்பையில் உள்ள நீரிலே, சீதபேதி, டைபாயிடு, காலரா, மஞ்சள்காமாலை மற்றும் வயிற்றுக் கோளாறு போன்ற நோய்களைப் பரப்பும் நோய்க் கிருமிகளும், விஷக்கிருமிகளும் இருக்கலாம். அரித்துப்போன குழாய்கள், அடைத்துக்கொண்டுள்ள வடிகால்கள், மற்றும் சுத்தம் செய்யப்படாத ஸ்டோரேஜ் டாங்குகள் வழியே இந்நோய்கள் உங்கள் வீட்டிற்குள் பரவும். இந்நிலையில் தூய்மையான, மாசற்ற குடிநீரை பெறும் நிச்சயமான வழி எது?

**குடிநீரை கொதிக்க விடலாம் ஆனால்?**
கொதிநிலைக்கு வந்தபின்னர் தண்ணீரை 15-20 நிமிடங்களாவது குறைந்தபட்சம் கொதிக்க விடவேண்டும். அதன்பின் அது ஆறும்வரை காத்திருக்க வேண்டும். தண்ணீரை ஆறவிட்டு வேறு பாத்திரத்தில் ஊற்றுவதற்குள் மீண்டும் அதில் தூசும் அழுக்கும் படியலாம்.





**வாட்டர் ஃபில்டர்கள் நண்பனா, எதிரியா?**
ஃபில்டர்கள், தண்ணீரில் உள்ள அழுக்குகளையும் கிருமிகளையும் வடிகட்டலாம். அதையும் மீறி நுண்ணிய விஷக்கிருமிகளும் நோய்க்கிருமிகளும் எப்படியோ தப்பிவிடும் தவிர ஃபில்டர் கேண்டில்களை சரிவர கழுவாவிட்டால் அதுவே நோய்க்கிருமிகளின் பிறப்பிடமாக மாறும்.

**குழாய் அட்டாச்மென்டுகள்-எந்த அளவு பாதுகாப்பானவை?**
நீர் வைப்புகளில் பொருத்தப்படும் அட்டாச்மென்டுகளில் நீரைத் தூய்மைப்படுத்துவதற்காக அயோடின் ரெஸின் உபயோகிக்கப்படுகிறது. ஒவ்வொரு முறை குழாயைத் திருகும்போதும் வெளியேறும் சிறிதளவு அயோடின் நாளடைவில் உங்கள் ஆரோக்கியத்தை பாதிக்கலாம். அப்படியும் இந்த அட்டாச்மென்டுகள் ஆற்றல் மிக்கவைதானா என்பதை நிச்சயம் கூறுவதற்கில்லை.





**அல்ட்ரா வயலெட் ஒளி-உங்கள் நம்பிக்கை நட்சத்திரம்.**
அல்ட்ரா வயலெட் முறை சூரிய ஒளியைப் போன்று செயல்படுகிறது. தண்ணீரை தூய்மைப்படுத்துவதற்கு இதுவே பாதுகாப்பான மற்றும் இயற்கையான முறை என்று கருதப்படுகிறது.

இன்று இம்முறையினால் செயல்படுகின்ற சிஸ்டம் ஒன்று கிடைக்கிறது. அதுவே **அக்வாகார்டு**. ஒரு ஸ்விட்சைத் தட்டினால் போதும், தூய்மையான குடி நீர் தயார்.

**அக்வாகார்டு எளிதாகவும், ஆற்றலுடனும் செயல்படுகிறது.**

- இது தண்ணீரிலிருந்து நிறம், மணம், தூசு, க்ளோரின் போன்ற இரசாயன பொருட்களை அகற்றுகிறது.
- அல்ட்ரா வயலெட் முறை, நீரினால் பரவும் நோய்களுக்குக் காரணமான நோய்க்கிருமிகளையும், விஷக்கிருமிகளையும் அழிக்கிறது.

அக்வாகார்டில் மட்டுமே இணையற்ற **எலெக்ட்ரானிக் கண்காணிப்பு** முறை உள்ளது. இது நீரின் தூய்மையான தரத்தை கண்காணிக்கிறது. தண்ணீரின் தூய்மையின் அளவு, முன் கூட்டியே நிர்ணயித்த தரத்திலிருந்து குறைவினால் நீரோட்டத்தை உடனே நிறுத்தி விடுகிறது.



94/EFL/583/Tam

**உங்கள் குடும்பத்தினரின் ஆரோக்கியத்தை விளையாட்டாக நினைக்கலாமா? பாதுகாப்புடன் இருங்கள். அக்வாகார்டு பொருத்துங்கள்.**



**உங்கள் இல்லத்தில் இலவச செய்முறை விளக்கத்திற்கு எங்களுக்கு எழுதவும் அல்லது எங்களை அணுகவும்.**

**யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட்**

பூபேஷ் குப்தா பவன், முதல்மாடி, 85, சயானி ரோடு, பிரபாதேவி, பம்பாய்-400 025. தொ. பேசி: 430 1725.

# அக்வாகார்ட்

அக்வாகார்டு வாட்டர் ஃபில்டர்-கம்-ப்யூரிஃபையர்

பாதுகாப்பான, தூய்மையான குடிநீர் பெறுவதற்கு

# கொல்ல வல்லாயோ கிளியே...

**ராஜேஷ் குமார்**

டி.எஸ்.பி. விஜயசாரதி இன்ஸ்பெக்டர் அரவிந்தனை வரவழைத்து நாளிதழில் வெளிவந்திருந்த போட்டோக்களைக் காட்டியதும் அவர் ஸ்தம்பித்துப் போய் விழிகளை விரித்தார்.

"ஸ... ஸார்... இது... எப்படி... சாத்தியம்...? அகிலை கொலை பண்ணின அந்த ஆணும், பெண்ணும் போன வருஷம் இதே நாள்ல இறந்து போயிருந்தா... நேத்து வந்தது யாரு?"

"நீத்தார் நினைவு நாள் போட்டோக்களில் இருக்கிற பெண்ணோட பேர் ப்ரீதி, ஆணோட பேர் பவித்ரன். இந்த ரெண்டு பேரோட போட்டோக்களும் அகில் வரைஞ்சு கொடுத்த ஓவியங்களோடு துல்லியமா பொருந்துது. ஆனா செத்துப் போனவங்க... மறுபடியும் எப்படி உயிரோடு வந்தாங்க...?"

அரவிந்தன் வியர்த்துப் பொடித்திருந்த தன் முகத்தை கர்ச்சீப்பால் ஒற்றிக் கொண்டே டி.எஸ்.பி.யை ஏறிட்டார்.

"ஸார்... என் மனசை நெருடற ஒரு விஷயத்தைச் சொல்லட்டுமா...?"

"என்ன...?"

"இது ஆவி விவகாரம் ஸார்...!"

"என்னது... ஆவியா...? வாட் நான்சென்ஸ்! செத்துப் போன ப்ரீதியும், பவித்ரனும் ஆவிகளா வந்து அகிலை கொன்னுட்டாங்கன்னு சொல்ல வர்றீங்களா...?"

"ஆமா ஸார்."

டி.எஸ்.பி. சிரித்தார்.

"ஒரு போலீஸ்மேன் இப்படிப் பேசக் கூடாது..."

"ஸார்! நான் இப்படி சொல்ல காரணம் இருக்கு."

"என்ன காரணம்...?"

"அகிலோட ஸ்டேட்மெண்ட்படி அவரை மொதல்ல லாரி ஏத்தி கொல்லப் பார்த்திருக்காங்க... எனக்குத் தகவல் கிடைச்சதுமே அந்த லாரியை ட்ரேஸ் அவுட் பண்ண எவ்வளவோ முயற்சி பண்ணினேன். ஆனா அந்த லாரி எந்த திசையில் போச்சுன்னு கூடத் தெரியலை. ரெண்டாவதா அகிலை லிஃப்ட்ல போகும் போது அந்த ஆணும் பெண்ணும் கொல்லப் பார்த்திருக்காங்க. அந்த முயற்சியிலிருந்தும் தப்பின அகில், ரெண்டு பேரையும் மாடிப் படிகளில் துரத்திட்டுப் போயிருக்கார். அவரோடு மற்ற ஃபிளாட்காரர்களும் போயிருக்காங்க. ஆனா அகிலைத் தவிர மற்ற யாருக்குமே அந்த ரெண்டு பேர் தட்டுப்படலை. ஃபிளாட்ல இருந்தவங்களைத் தனியா நான் விசாரிச்சப்ப... அவங்க அந்த ஆணையும், பெண்ணையும் பார்க்கலைன்னுதான் சொன்னாங்க. எல்லாத்துக்கும் மேலா..."

"ம்... சொல்லுங்க..." டி.எஸ்.பி. புன்னகைத்தார்.

அரவிந்தன் தொடர்ந்தார். "அகில் கொலை செய்யப்பட்ட விதம். கதவு உட்பக்கமா தாழ் போட்டிருந்தது. எந்தப் பக்கத்தில் இருந்தும் யாரும் உள்ளே போக சாத்தியம் இல்லை. ஆனா... அகில் சத்தமே இல்லாம ரத்தம் சிந்தி கழுத்து அறுபட்டு செத்திருக்கார். இந்தக் காரணங்களையெல்லாம் வெச்சு பார்க்கும் போது இது ஏதோ ஒரு அமானுஷ்ய வேலைன்னு என் மனசுக்குப் படுது ஸார்..."

டி.எஸ்.பி. சிரித்தார். "இது அமானுஷ்ய வேலை இல்லை அரவிந்தன். மனுஷங்களோட வேலைதான். மொதல்ல இந்த நீத்தார் நினைவு நாள் விளம்பரத்தைக்

# 4

கொடுத்தது யாருன்னு பார்ப்போம்."

டெலிபோனைத் தொட்டு ரிஸீவரை எடுத்துக் கொண்ட டி.எஸ்.பி. நாளிதழின் டெலிபோன் எண்ணை டைரக்டரியில் பார்த்து, டயலில் தட்டினார். மறு முனையில் ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டது. ரிசப்ஷனிஸ்ட் பேசினாள்.

"ஹலோ... தினக்குரல் ஆபீஸ்..."

"நான் டி.எஸ்.பி. பேசறேன்... அங்கே அட்வர்டைசிங் இன்சார்ஜ் யாரு...?"

"கோமதிநாயகம் ஸார்."

"அவர்கிட்டே பேசணும்."

"ஒரு நிமிஷம் ஸார்..."

அடுத்த சில விநாடிகளுக்குள்ளாகவே அந்த கோமதிநாயகம் லைனுக்கு வந்தார்.

"வணக்கம் ஸார்.. நான் கோமதிநாயகம்."

"ஒரு தகவல் வேணுமே...?"

"சொல்லுங்க ஸார்...."

"இன்னிக்கு வந்த இஷ்யூவில் மூணாவது பக்கம் ஒரு இரங்கல் விளம்பரம் வந்திருக்கு... ப்ரீதி - பவித்ரன்...?"

"ஆமா..."

"அந்த விளம்பரத்தைக் கொடுத்தது யாரு...?"

"ப்ளீஸ் பி ஆன் த லைன் ஸார்..."

டி.எஸ்.பி. காத்திருக்க, நிமிஷ நேரம் கழித்து, கோமதிநாயகத்தின் குரல் கேட்டது.

"ஸார்... அந்த விளம்பரம் மெட்ராஸி லிருந்து குடுத்திருக்காங்க. அட்ரஸை நோட் பண்ணிக்கறீங்களா...?"

"சொல்லுங்க...."

"எஸ். ப்ரசன்னமூர்த்தி, நெம்பர் நைன் டீன் அரோமா அவென்யூ, டி. நகர்...."

"தேங்க்யூ..." அட்ரஸை குறித்துக் கொண்டு ரிஸீவரை வைத்த டி.எஸ்.பி., அரவிந்தனை ஏறிட்டார்.

"இந்த பிரசன்னமூர்த்தியை பிடிச்சா... எல்லா விவரமும் வெளியே வரும்."

"நாம மெட்ராஸுக்குப் போகணுமா ஸார்?"

"வேண்டாம்... க்ரைம் ப்ராஞ்ச் விஷ்ணுவை போன்ல காண்டாக்ட் பண்ணி அகில் விவகாரத்தை சொல்லிடுவோம். விஷ்ணு, பிரசன்ன மூர்த்தியை என்கொயர் பண்ணிட்டு, நமக்கு விஷயத்தைச் சொல்லட்டும். அதுக்குப் பிறகு தேவைப்பட்டா... மெட்ராஸ் போவோம்."

சொன்ன விஜயசாரதி எஸ்.டி.டி.யில் அடுத்த நிமிஷமே மெட்ராஸ் க்ரைம் ப்ராஞ்சில இருந்த விஷ்ணுவைப் பிடித்து அகிலைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார்.

முழுதாய் ஐந்து நிமிடங்கள்.

மறுமுனையில் விவரம் அனைத்தையும் கேட்டுக் கொண்ட விஷ்ணு இரண்டு மணி நேரம் கழித்து போன் பண்ணுவதாகச் சொல்ல, விஜயசாரதி ரிஸீவரை வைத்தார்.

"அடுத்த ரெண்டு மணி நேரத்துக்குள்ளே எல்லாமே வெளிச்சத்துக்கு வந்துடும்..."

அரவிந்தன் ஏதோ சொல்ல வாயெடுத்த விநாடி, மேஜையின் மூலையில் உட்கார்ந்திருந்த அந்த கறுப்பு டெலிபோன் திடும்மென்று வாயைத் திறந்தது.

அரவிந்தன் ரிஸீவரை எடுத்தார்.

"ஹலோ..."



எங்களுடைய 30 ஆண்டு வல்லமையை வெல்லக்கூடியது ஒன்றுதான்.

அதுவே எங்களுடைய இன்றைய பாலன்ஸ் ஷீட்.

ஐ.டி.பி.ஐ. சாதனை பிரதிபலிக்கிறது: சர்வதேச அளவிலான சொத்து ரூ. 34,000 கோடிக்கு மேல். இந்தியாவிலுள்ள எல்லா வங்கிகள் மற்றும் நிதி நிறுவனங்களுள் மிக அதிக நிகர லாபம் —ரூ. 611 கோடி. 92% உற்பத்தித் திறன் சொத்து/செயல்படும் சொத்து. போதுமான மூலதன விகிதம் 13.4%.

**உலகிலேயே பத்தாவது மிகப்பெரிய முன்னேற்ற வங்கியின் தனித்தன்மைகள்**

- உலக டெவலப்மென்ட் வங்கிகளுள் பத்தாவது மிகப்பெரிய சொத்து அடிப்படையிலானது.
- இந்தியாவின் முதல் தரமான நிதி நிறுவனம். ஐ.டி.பி.ஐ. இந்திய தொழிற்துறைக்கு ரூ. 75,000 கோடிக்கு மேல் நிதி வழங்கியுள்ளது.
- கடன் வழங்குதலில் கூட்டு வருட வளர்ச்சி வீதம் 27% கடந்த ஐந்து ஆண்டுகளில் கொடுக்கப்பட்ட பணம் 21% மற்றும் வரிக்கு முந்திய லாபத்தில் 30% என சாதித்துள்ளது.
- ஒரு சர்வதேச கடன் இஷ்யூவிற்கு மிக அதிகப்படியான கிரிடிட் ரேட்டிங் (BBB+ ஜப்பான் பாண்டு ரிசர்ச் இன்ஸ்டிட்யூட் மூலம்) பெற்றுள்ள இந்திய பாரோவராகும்.

"நீங்கள் விவேகமும், புதுமைகாணும் திறனும் உடையவர்களாய் உள்ளபோது, தோழா, உங்கள் சாதனை பேசும் ஆயிரம் ஆயிரம் வார்த்தைகள்."



கவனமாக செய்திட்ட யூகமும், புதுமை காணுதலும் சேர்ந்தது. ஐ.டி.பி.ஐ. உலகிலேயே பத்தாவது மிகப்பெரிய முன்னேற்ற வங்கி. இப்போது, முற்போக்குக் கொள்கை பல புதிய வாய்ப்புகளுக்கு வழிகோலுகிறது. ஐ.டி.பி.ஐ. தன்னை நாட்டின் மிகப்பெரிய நிதி திரட்சி நிறுவனமாக மாற்றி அமைத்துக் கொண்டு இருக்கிறது.

**IDBI**

இண்டஸ்ட்ரியல் டெவலப்மென்ட் பாங்க் ஆஃப் இந்தியா
ஐ.டி.பி.ஐ. டவர், கஃபே பரேடு, பம்பாய் - 400 005.

**இந்திய பொருளாதாரத்திற்கு தூணாய் விளங்குவது.**

Adfactors/IDBI/295/94 F2 TM

மறுமுனையில் சப்-இன்ஸ்பெக்டர் புஷ்ப ராஜ் குரல் கொடுத்தார். "ஸார்... நான் புஷ்ப ராஜ்..."

"சொல்லுங்க..."

"ஸார் நீங்க கொடுத்த துண்டுச் சீட்ல இருந்த அந்த வார்த்தை 'ஹேலோபிரிடால் -15'க்கு எந்த ஆர்டிஸ்ட்டுக்குமே அர்த்தம் தெரியலை. அது ஒரு ஆர்ட் சம்பந்தப்பட்ட வார்த்தையா இருக்காதுன்னு நினைச்சு... ஃபாரன்ஸிக்ல கொடுத்தேன். ஃபாரன்ஸிக் கெமிஸ்ட் ஜார்ஜ் கண்டுபிடிச்சுட்டார்."

"என்ன அது...?"

" 'ஹேலோபிரிடால்'ங்கிறது ஒரு மாத்திரையோட பேர் ஸார். 15ன்னு ரவுண்ட் பண்ணியிருக்கிறது மாத்திரைகளோட எண்ணிக்கை. மாத்திரை வாங்கிட்டு வரச் சொல்லி அகில் யார்கிட்டேயாவது இப்படி எழுதிக் கொடுத்திருக்கலாம்ன்னு அவர் சொன்னார்...."

"அந்த மாத்திரையை எதுக்காகச் சாப்பிடறதுன்னு கேட்டீங்களா?"

"கேட்டேன். அவருக்குத் தெரியலை. வெளியே வந்து ஒரு பார்மஸியில் கேட்டேன்... பார்மஸிக்காரர் மருந்தைப் பார்த்துட்டு, இது சிட்டியில் ஒரே ஒரு பார்மஸியில்தான் கிடைக்கும். அங்கே போய் கேளுங்கன்னு சொல்லி அட்ரஸ் கொடுத்தார். லோகமான்யா ஸ்ட்ரீட்ல தமிழ்நாடு மெடிக்கல்ஸ்ன்னு ஒரு பார்மஸி. சில மருந்துகளைத் தவிர மத்த எல்லாமே ஹோல்சேல்தான். ஹேலோபிரிடால்ன்னு எழுதியிருந்த அந்த மருந்துச் சீட்டைக் காட்டியதுமே மஃப்டியில் இருந்த என்கிட்டே அந்தக் கடைக்காரர் 'ஆர்ட்டிஸ்ட் அகில் வாங்கிட்டு வரச் சொன்னாரா'ன்னு கேட்டான்."

அரவிந்தன் நிமிர்ந்தார்:

"அப்படீன்னா பார்மஸிக்காரனுக்கு அகிலை நல்லா தெரிஞ்சிருக்கு."

"ஆமா... ஸார்...! நான் இப்போ யூனிஃபார்மில் இல்லாததினால மேற்கொண்டு அதட்டி விசாரிக்க முடியலை. நீங்க புறப்பட்டு வந்தா போலீஸ் தோரணையோடு அகிலைப் பத்தின விஷயங்களைக் கறந்துடலாம் ஸார்...."

"இப்ப... நீங்க எங்கிருந்து பேசிட்டிருக்கீங்க...?"

"லோகமான்யா ஸ்ட்ரீட் கார்னரில் இருக்கிற டெலிபோன் பூத்திலிருந்து."

"பத்து நிமிஷத்துல வந்துடறேன்..." அரவிந்தன் ரிஸீவரை வைத்து விட்டு, டி.எஸ்.பி.யிடம் விவரம் சொல்லிக் கொண்டபின் புறப்பட்டார்.

தமிழ்நாடு மெடிக்கல்ஸ் பார்மஸி, இன்ஸ்பெக்டர் அரவிந்தனின் வருகையில் கலகலத்துப் போயிற்று.

பார்மஸி சிப்பந்தி வியர்த்து வழிந்தார். அரவிந்தன் கேட்டார். " 'ஹேலோபிரிடால்...' - இது என்ன மருந்து...?"

"ந்யூரோஸிஸ் சம்பந்தப்பட்ட நோய்க்கான மருந்து ஸார். ஆர்ட்டிஸ்ட் அகில் ஆறு மாசமா இந்த மாத்திரைகளைச் சாப்பிட்டுக்கிட்டு இருக்கார்..."

"ந்யூரோஸிஸ்...? அது என்ன வியாதி?"

"எனக்குத் தெரியாது ஸார்... டாக்டர் ஜோஷிதான் முதல் முதலா ப்ரஸ்க்ரைப் பண்ணி சீட்டு கொடுத்து அனுப்பினார். இந்த மருந்து வேற எங்கும் கிடைக்காததினால... அகில் இங்கே வந்து மருந்தை வாங்கிட்டு போவார். கடந்த ரெண்டு மூணு மாசமா அவர் வர்றதில்லை. ஆர்ட் காலரியைச் சேர்ந்த ஒரு பையன் வந்து துண்டுச் சீட்டைக் காட்டி வாங்கிட்டு போவான்."

"டாக்டர் ஜோஷியோட க்ளினிக் எங்கே இருக்கு?"

"சாய்பாபா காலனியில் நெம்பர் ஃபைவ், அழகேசன் ரோடு..."

ஜோஷி - சைக்யாட்ரிஸ்ட் - என்று ஆங்கிலம் பேசிய போர்டைக் கண்டு அரவிந்தனும் புஷ்பராஜும் ஒருத்தரையொருத்தர் பார்த்துக் கொண்டார்கள்.

"புஷ்பராஜ்...! இவர் உடல்நோய்க்கான டாக்டர் இல்லை. மனநோய்க்கான டாக்டர்..."

புத்தகம் படித்துக் கொண்டிருந்த டாக்டர், இவர்களைப் பார்த்ததும்,

"நீங்கள் எதற்காக வந்திருக்கிறீர்கள் என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா...?" என்றார்.

"டாக்டர்! ஆர்ட்டிஸ்ட் அகில் உங்கள் பேஷண்ட்தானே?"

"ஆமாம்..."

"அவருக்கு என்ன பிராப்ளம்...?"



"ஆபரேஷன் கேன்சல் ஆயிடுச்சு. நீங்க நாளைக்கு வாங்களேன்!"

- டி. என். பாலகிருஷ்ணன்

"அகில் இப்போது உயிரோடு இல்லை என்று நினைக்கிறேன் சரியா...?"

"எஸ்... டாக்டர்... ஹி... ஹாஸ் பீன் மார்டர்ட் பை ஸம்படி..."

"நோ... யூ... ஆர் ராங் இன்ஸ்பெக்டர். அது கொலையாக இருக்காது. தற்கொலை செய்து கொண்டுதான் அவர் இறந்து போயிருக்க வேண்டும். அநேகமாய்க் கழுத்தை அறுத்துக் கொண்டு."

"டா... டாக்டர்...."

"என்ன நான் சொன்னது சரியா...?"

"மிகச் சரியாய்ச் சொல்லி விட்டீர்கள் டாக்டர்... ஆனால் அகிலைக் கொலை செய்ய இரண்டு பேர் முயற்சி செய்வதாய் அவர் சொன்னார்."

டாக்டர் புன்னகைத்தார்.

"அந்த இரண்டு பேரில், ஒரு ஆண். ஒரு பெண்?"

"ஆமாம்...."

"லாரி ஏற்றி கொல்லப் பார்த்திருப்பார்களே?"

"ஆமாம்...."

"எல்லாம் கற்பனை.. நிஜம் போன்ற பிரமை. மனநோய்களில் இது ஒரு வித்தியாசமான நோய். ஓ...ஸி.என்..."

"ஓ...ஸி...என்...?"

"ஒப்ஸஸிவ் கம்பல்ஸிவ் நியூரோஸிஸ். தன்னை யாரோ பின்தொடர்ந்து வருகிற மாதிரியும், கொலை செய்ய முயற்சிப்பது போலவும் இவர்களுக்குத் தோணும். அப்படித் தோன்றுவதற்குக் காரணம் கடந்த காலத்தில் அவர்கள் யாருக்காவது கெடுதல் பண்ணியிருக்கலாம்..."

"டாக்டர்! நீங்கள் சொல்வது புரியவில்லை."

"அகில் இரண்டு பேர்களைக் கொன்ற ஒரு கொலையாளி என்று சொன்னால் நீங்கள் நம்புவீர்களா...?"

"அகில் கொலையாளியா...?"

"எஸ்... சென்ற வருடம் அகில் சென்னை தி.நகரில் இருக்கும் ஒரு ஆர்டிஸ்ட் நண்பரைப் பார்ப்பதற்காகப் போயிருக்கிறான். அது இரவு நேரம். ஆர்ட்டிஸ்ட் நண்பர் வேறு வீட்டுக்குக் குடிபோய் விட்ட விவரம் தெரியாமல் பழைய வீட்டுக்குப் போயிருக்கிறான். அந்த வீட்டுக்குப் புதிதாகக் குடிவந்த ஒரு பெண், குளித்து விட்டு வந்து உடை மாற்றிக் கொண்டிருந்த நேரத்தில் அகில் போயிருக்கிறான். அகில் அழகான பெண்களைப் பார்த்ததுமே எளிதில் உணர்ச்சிவசப்படுபவன். அழகான பெண்ணை அந்தக் கோலத்தில் பார்த்ததும், அவளைப் பலவந்தப்படுத்தி இச்சையைத் தீர்த்துக் கொண்டும்



**''கவிட்டா ஏதாவது பேசு டார்லிங்.''**
**''பொங்கல்ல இனிப்பு குறைச்சலா இருந்திச்சிங்க.''**
**- குடந்தை கே. ஆர். ரவிக்குமார்**

முயற்சியில் வெற்றி கிடைத்தாலும் அவள் இறந்து போனது அகிலுக்கு பெரிய அதிர்ச்சி. அந்த அதிர்ச்சியிலிருந்து மீள்வதற்குள், அந்தப் பெண்ணின் கணவன் வந்து விட, கிச்சன் கத்தியை எடுத்து, அவனைக் குத்திக் கொன்று விட்டு சத்தம் காட்டாமல் ஊர் திரும்பி விட்டான்."

ஜோஷி, பேச்சை சில விநாடிகள் நிறுத்தி விட்டு தொடர்ந்தார்.

"அகில் இரண்டு கொலைகளைச் செய்து விட்டு வெளிப்பார்வைக்கு இயல்பாய் இருந்தாலும், அவனுடைய சப்-கான்ஷியஸ் மைண்டில் ஒரு கலவரம் ஆரம்பித்தது. அதன் விளைவு அவன் ஒரு சைக்கோ பேஷண்டாய் மாற ஆரம்பித்தான். என்னை ஆறு மாதத்துக்கு முன்பு முதல் தடவையாய் வந்து பார்த்தான். 'டாக்டர் என்னை யாரோ பின் தொடர்ந்து வருகிறார்கள். லாரி ஏற்றி கொல்லப் பார்க்கிறார்கள். நான் தூங்கும் போது என் படுக்கையின் தலைமாட்டில் ஒரு பெண்ணும், கால்மாட்டில் ஒரு ஆணும் உட்கார்ந்து கொண்டு, என்னையே பார்த்துக் கொண்டிருப்பது போன்ற உணர்ச்சி. சமயத்தில் ஒரு கத்தியை எடுத்துக் கொடுத்து என் கழுத்தை அறுத்துக் கொள்ளும்படி கட்டாயப்படுத்துகிறார்கள். இந்த இம்சைகளை என்னால் தாங்க முடியவில்லை. என்றைக்காவது ஒருநாள் அவர்கள் சொல்கிற மாதிரி கழுத்தை அறுத்துக் கொள்வேனோ என்று எனக்கே பயமாக இருக்கிறது. என்னை நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும் என்று சொன்னான். நான் ட்ரீட்மெண்ட் ஆரம்பித்தேன். ஆரம்பத்தில் அகிலுக்கு இருந்தது 'பேரனாய்ட் ஷிஸோஃப்ரினியா' என்கிற மனநோயின் ஆரம்ப நிலை. அது படிப்படியாய் வளர்ந்து OCN அளவுக்கு வந்து விட்டது."

"அகில் கொலை செய்த விவரங்களை எப்படித் தெரிந்து கொண்டீர்கள் டாக்டர்...?"

"பத்து நாட்களுக்கு முன் சைக்கோ சர்ஜரி என்கிற ஒரு வகை ஹிப்னாடிஸத்துக்கு அவனை உட்படுத்தி, உண்மைகளை அவன் வாயிலிருந்தே சொல்ல வைத்தேன். அதை டேப் செய்தும் வைத்திருக்கிறேன்."

"அகில் ஒரு கொலையாளி என்று தெரிந்த பின் போலீஸுக்குத் தகவல் கொடுத்திருக்கலாமே டாக்டர்...?"

"ஸாரி... இன்ஸ்பெக்டர்... அடுத்த வாரத்தில் நான் இந்தியாவை விட்டுப் புறப்பட்டு அமெரிக்காவில் உள்ள என் மகனோடு செட்டிலாகப் போகிறேன். இந்த நேரத்தில் அகிலின் பிரச்னையை நான் கிளற விரும்பவில்லை. கிளறினால் இதில் ஒரு முக்கிய சாட்சியாக நான் இருக்க வேண்டி வரலாம்... ஹிப்னாடிஸம் செய்ததில் அகில் சொன்ன உண்மைகள் இந்த ஆடியோ காஸெட்டில் இருக்கின்றன. நீங்கள் போட்டு கேட்கலாம்..."

மேஜையின் இழுப்பறையைத் திறந்து, ஒரு ஆடியோ காஸெட்டை எடுத்து நீட்டினார் டாக்டர் ஜோஷி.

"எப்படியிருந்தாலும் உங்க பேர்ல எடுக்க வேண்டிய நடவடிக்கையை நாங்க எடுத்துத்தான் ஆகணும் டாக்டர்..."

டி.எஸ்.பி. அலுவலகம்.

இன்ஸ்பெக்டர் அரவிந்தன் டாக்டர் ஜோஷி சொன்னதை விஜயசாரதியிடம் சொல்லி முடித்திருக்க,

டெலிபோன் கூப்பிட்டது.

விஜயசாரதி ரிஸீவரை எடுத்தார். மறுமுனையில் எஸ்.டி.டி. மெட்ராஸ் கால். பேசியது விஷ்ணு.

"ஸார்... பிரசன்ன மூர்த்தியைப் போய்ப் பார்த்து விவரம் கேட்டேன். ப்ரீதி அவரோட பொண்ணு, பவித்ரன் அவரோட மாப்பிள்ளை. போன வருஷம் இதே தேதியில் ரெண்டு பேருமே கொலை செய்யப்பட்டிருக்காங்க... கொலையாளி யார்ன்னு தெரியலை... கேஸ் இன்னமும் அண்டர் இன்வெஸ்டிகேஷன். ஆர்ட்டிஸ்ட் அகிலைத் தெரியுமான்னு... ப்ரசன்னமூர்த்திகிட்டே கேட்டேன். தெரியாதுன்னு சொல்லிட்டார். கேஸ் இப்போ ஏகப்பட்ட குழப்பத்தில் இருக்கு ஸார்..."

"குழப்பமே இல்லை விஷ்ணு... அரை மணி நேரத்துக்கு முந்திதான் கேஸ் க்ளியராச்சு... கிரிஸ்டல் க்ளியர்..."

"என்ன ஸார் சொல்றீங்க...?"

மறுமுனையில் விஷ்ணு திகைக்க, டி.எஸ்.பி. விஜயசாரதி தொண்டையைக் கனைத்துக் கொண்டு சொல்ல ஆரம்பித்தார்.

(முற்றும்)

# ஓ.கே. கண்மணி!

பி. சி. கணேசன்

பிரவீனின் அலுவலக மேஜை மீது இருந்த டெலிஃபோன் மணி ஒலித்தது. எடுத்தான்.

"ஹலோ, மிஸ்டர் பிரவீன் இருக்காரா?" பெண்குரல்.

வெளியிலிருந்து பெண்கள் அவனுக்குப் ஃபோன் செய்வது கிடையாது. மூன்று, நான்கு கேர்ல் ஃபிரெண்ட்ஸ் அவனுக்கு இருக்கிறார்கள். அனைவருமே அவனுடைய அலுவலகத்தில் வேலை பார்க்கிறவர்கள். யார் இந்தப் பெண்?

"பிரவீன்தான் பேசறேன். உங்களுக்கு என்ன வேணும்?"

"என்னை உங்களுக்குத் தெரியாது. என் பெயர் சுலபா. நான் உங்களை நேரில் பார்த்துப் பேசணும். உங்களுக்கு எப்போ சௌகரியப்படும்?"

"என்னைத் தெரியாத நீங்க என்கிட்ட என்ன பேசப் போறீங்க?"

"அதை ஃபோனில் சொல்ல முடியாது. சொல்ல முடிந்தால் சொல்லியிருப்பேன். நேரில்தான் சொல்லணும்."

ஒருகணம் தயங்கினான் பிரவீன். மாட்டேன் என்றும் அவனால் சொல்ல முடியவில்லை. "இப்ப எங்கிருந்து பேசறீங்க?"

"பப்ளிக் பூத்திலிருந்து பேசறேன். எனக்குப் பின்னாடி பெரிய கியூ வரிசை நிக்குது. சீக்கிரம் சொல்லுங்க."

"சரி, உங்களை எப்போது எங்கே நான் சந்திக்கலாம்?"

"உங்க ஆபீஸுக்கு பக்கமாகவே ஒரு இடம் சொல்லுங்க. சாயந்திரம் ஐந்தரை மணிக்கு மேல்தான் என்னால் வர முடியும்."

பிரவீன் யோசித்தான். "என் ஆபீஸ் அண்ணா சாலையில் அண்ணா சிலைக்குப் பக்கமாக இருக்கு. ராஜாஜி ஹாலுக்கு முன்னாடி சந்திக்கலாமா?"

"ரொம்ப தேங்ஸ். என்னை எப்படி அடையாளம் கண்டு பிடிப்பீங்க?"

"சொன்னால்



கண்டுபிடிச்சிடுறேன்."

"ஒண்ணும் வேண்டாம். ராஜாஜி ஹாலுக்கு நிறையப் படிக்கட்டுகள் இருக்கு. யாருமே உட்காராத ஒரு படிக்கட்டில் நான் தனியாக உட்கார்ந்திருப்பேன்."

"அப்படி ரெண்டு மூணு பேர் உட்கார்ந்திருந்தால் நான் என்ன பண்றது?"

"கவலையே வேண்டாம். கூலிங் கிளாஸ் போட்டிருப்பேன். அடிக்கடி கழற்றி கழற்றி மாட்டிக் கொண்டிருப் பேன். நீங்க வந்ததும் கர்ச்சீப்பால் அடிக்கடி முகத்தைத் துடையுங்கள். ஈஸி. ஒருத்தரை ஒருத்தர் கண்டுபிடிச் சுடலாம். சரியாக ஐந்தரை மணிக்குக் காத்திருப்பேன்."

அதற்குள் கியூ வரிசையிலுள்ள சிலர் அவளை அவசரப்படுத்த, அவள் ஃபோனை வைத்து விட்டது தெரிந்தது.

**க**லபா... அந்தப் பேரை அடிக்கடி சொல்லிப் பார்த்துக் கொண்டான் பிரவீன். யார் இந்தப் பெண்? என்னிடம் என்ன பேசப் போகிறாள்? பிரவீனுக்கு படித்த சஸ்பென்ஸ் த்ரில்லர்கள் நினைவுக்கு வந்தன. இந்த கலபா எந்த சிக்கலிலாவது என்னை மாட்டி வைக்கப் போகிறாளோ? அப்படி இருக்காது. ராஜாஜி ஹாலின் முன், அதுவும் மாலை நேரத்தில் ஜன நடமாட்டம் நிறையவே இருக்கும். ஒரு பெண் அப்படி என்னை என்ன செய்து விட முடியும்?

கோப்புகளை மூடிவைத்து விட்டு மாலை ஐந்து மணிக்கே கிளம்பி விட்டான் பிரவீன்.

வாலாஜா ரோடு கேட் வழியாக நுழைந்தான். ராஜாஜிஹால் மைதானத்தை நெருங்கிய போது அவனுடைய இருதயம் வேகம் பெற்றது. கர்ச்சீப்பால் முகத்தைத் துடைத்துக் கொண்ட உடனே கலபா சொன்னது நினைவுக்கு வந்தது. அவனை அறியாமலே திரும்பத் திரும்பத் துடைத்துக் கொண்டு படிக் கட்டுகளை ஏறிட்டுப் பார்த்தான். படிக்கட்டுகளில் உட்கார்ந்திருந்த வர்களில் அவளைச் சுலபமாகக் கண்டுபிடிக்க முடிந்தது. கூலிங் கிளாஸ்...

நடுத்தர உயரம், மாநிறம், களையான முகம். கவர்ச்சியான கண்கள். குரல்

முல்லா தன் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த சிறுவனிடம் பானை ஒன்றைக் கொடுத்து, "கிணற்றுக்குப் போய் இந்தப் பானை நிறைய நீர் கொண்டு வா" என்று சொன்னார். அவன் கிளம்பிய போது, முல்லா அவனைத் திரும்ப அழைத்து, "பானை ஜாக்கிரதை! உடைத்தால் அறை கொடுப்பேன்" என்று சொல்லி சிறுவனின் முதுகில் ஓர் அறை கொடுத்தார்.

இதைக் கண்ட ஒருவன், "முல்லா, சிறுவன் பானையை உடைத்தால்தானே அடிக்க வேண்டும். அதற்கு முன்பே ஏன் அறைந்தீர்?" என்று கேட்டான்.

அதற்கு முல்லா, "முட்டாளே! பானையை உடைத்த பின் அறை கொடுத்தால், பானை திரும்பக் கிடைக்குமா? ஆனால் முன்பே கொடுக்கும் அறை அவனை எச்சரிக்கையாக நடக்கும்படி செய்து பானையைப் பாதுகாக்கும்!" என்றார்.

— முல்லாவின் வேடிக்கை கதைகள் நூலிலிருந்து : ஆர். பிரகாசம்.



இனிமைக்கேற்ற இளமைதான். சந்தேகமே இல்லை.

இவன் என்ன சொல்லப் போகிறான் என எண்ணியபோது பிரவீனுக்கு உதறல் எடுத்தது. அதை அவள் பார்த்து விடக் கூடாது என்று சமாளிப்பில் இறங்கினான்.

"நான் கலபா, நீங்கள் பிரவீன்தானே?"

அவள் முகத்தில் குழந்தைத்தனம், குறும்பு இரண்டின் கலவையும் இருப்பதைக் கவனித்தான்.

"என் பெயர் உங்களுக்கு எப்படித் தெரியும்? என் கம்பெனி ஃபோன் நம்பரை உங்களுக்கு யார் கொடுத்தது? என்னிடம் என்ன பேசப் போகிறீர்கள்?"

"எல்லாம் விவரமாகச் சொல்லத்தான் உங்களை அழைத்தேன். வாங்க அந்த மரத்தடியில் உட்கார்ந்து அமைதியாகப் பேசலாம்."

அவளை அவனால் கணிக்க முடியவில்லை. அவளுடன் சேர்ந்து மர நிழலை நோக்கி நடந்தான். அவள் உட்கார, அவள் எதிரில் அவன் அமர்ந்தான். சுடிதார் அவளுக்கு அழகாகவே இருந்தது. இளமையை வெளிப்படுத்துவதாகவும் இருந்தது.

"என் பெயர் கலபா. உங்களுக்கு ஞாபகம் இருக்கும் என்று நினைக்கிறேன். நான் ஒரு பிரைவேட் கம்பெனியில் ஸ்டெனோவாக வேலை பார்க்கிறேன். இருபத்தி நாலு வயது. மூன்று வருஷ சர்வீஸ். வேலை அனேகமாக பர்மனென்ட் போலத்தான். ஆயிரத்து ஐநூறு ரூபாய் வாங்குகிறேன்—"

"உங்கள் பயோடேட்டாவைத் தெரிந்து கொண்டு நான் என்ன செய்யப் போறேன். இதை விடப் பெரிய வேலை கொடுக்குற தகுதியும் அந்தஸ்தும் எனக்கில்லை."

"உங்களிடம் வேலை கேட்டு நான் வரவில்லை மிஸ்டர் பிரவீன். வேலைக்கு மட்டும் அல்ல, வேறு விஷயங்களுக்கும் பயோடேட்டா தேவைப்படுது."

"எனக்குப் புரியலை கலபா."

"பேர் சொல்லி நீங்க கூப்பிட்டதிலே எனக்கு ரொம்ப சந்தோஷம். அடுத்த ஞாயிற்றுக் கிழமை நீங்க என்னைப் பெண் பார்க்க வர்றீங்க."

"வாட் டு யூ மீன்?"

"ஆமாம் வர்ரீங்க"

"வராட்டி என்ன செய்வே?"

"தலையெழுத்தை நினைத்து வருத்தப்படுவேன்."

அவள் கண்கள் கலங்கின. அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

"மிஸ்டர் பிரவீன், என்னை நீங்க பெண் பார்க்க வரப்போறதா உங்கப்பா, எங்கப்பாவுக்குத் தகவல் கொடுத்திருக்கிறார். அதற்கு முன்னாடி உங்களைப் பார்த்து பேச ஆசைப்பட்டேன். அதனாலதான் இந்த சந்திப்பு.'

"எங்கப்பா என்கிட்டே சொல்லவேயில்லை கலபா."

"சொல்லுவார். நான் உங்களைப் பார்க்க வந்ததற்கான காரணத்தைச் சொல்லிடறேன். என்னைப் பெண் பார்க்க வருகிற பதினோறாவது ஆள் நீங்க. பத்து பேரும் வந்தாங்க, பார்த்தாங்க, பயோடேட்டா கேட்டாங்க.

ஒவ்வொரு காரணத்தாலே, ஒவ்வொண்ணும் முடியலே. இப்படி அடிக்கடி பலரும் என்னைப் பெண் பார்க்க வரதாலே அக்கம் பக்கத்திலே உள்ளவர்கள் என்னைப் பற்றி என்னென்னமோ பேசிக்க ஆரம்பிச்சுட்டாங்க. எனக்கு கல்யாணம் ஆகாட்டியும் பரவாயில்லை. ஏதோ ஷோகேஸ் பொம்மை மாதிரி என்னை வந்து பார்த்திட்டு அபிப்பிராயம் சொல்லி விட்டுப் போறது எனக்குப் பிடிக்கலை. என்னை இப்போ நீங்க நேரா பார்த்துட்டீங்க. முக்கியமான விவரங்களையும் நான் சொல்லிவிட்டேன். உங்களுக்கு என்னைப் பிடித்திருந்தால் பெண் பார்க்க வாங்க. இல்லாவிட்டால் உங்க அப்பாவிடம் ஏதாவது காரணம் சொல்லி வராமலே இருந்திடுங்க."

பிரவீன் பதில் சொல்லாமல் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். அவள் தலை கவிழ்ந்தபடி உட்கார்ந்திருந்தாள்.

"என்ன யோசிக்கிறீங்க? வரதட்சிணை பற்றியெல்லாம் நான் எதுவும் சொல்லலையேன்னு பார்க்கிறீங்களா? அப்பா பதினைந்து பவுன் நகை போடுவார். கல்யாணத்தை ஓரளவுக்கு சிறப்பாக நடத்துவார். ஒருவேளை வரதட்சிணை கேட்டால் ஐயாயிரம் ரூபாய் வரை கொடுப்பார். அதற்கு மேல் தாங்காது."

"அது கிடக்கட்டும் கலபா, என் உத்யோகம் என்ன, சம்பளம் என்ன, எதுவும் நீ கேட்கலையே."

"நான் பெண்... அந்த அதிகாரத்தை இன்னமும் சமூகம் எனக்குக் கொடுக்கலே. நிராகரிக்கிற உரிமை ஆண்களுக்கு மட்டும் தான் இருக்கு. நான் உங்களைக் கேட்க வேண்டிய அவசியம் இல்லை. நான் வந்த காரியம் முடிந்து விட்டது. நான் வர்றேன்."

அவனுடைய பதிலுக்கு அவள் காத்திருக்கவில்லை. எழுந்து வேகமாக நடந்தாள். அவளுடைய அழகைவிட அவளுடைய துணிச்சல் அவனுக்கு ரொம்பவும் பிடித்திருந்தது.

"கலபா! ஒரு நிமிஷம்..." என்றான் பிரவீன்.

அவள் திரும்பிப் பார்த்தாள்.

இருவர் கண்களும் பேச ஆரம்பித்திருந்தன.

நாங்கள் சொல்வது, புதிய ஃபோர்ப்ஸ் மிக்ஸர் கிரைண்டரிலுள்ள ஹை-காப் மோட்டாரைப் பற்றிதான். அதில் சரியான அளவு காப்பர் வைண்டிங் உள்ளதால், மற்ற மிக்ஸிகளைப் போல இது அதிக சூடாவதில்லை. எனவே இதில் தயாரிக்கப்படும் இட்லி, வடை, சட்னி, கோஃப்தா, அல்வா போன்ற உணவு வகைகள் மிகவும் சுவையாக இருக்கின்றன.

தொழில்நுட்பத் துறையில் வல்லுநர்களால் ஹை-காப் மோட்டார் வடிவமைக்கப் பட்டுள்ளது. மேலும் இந்த மோட்டார் சமநிலையுடன் பொருத்தப்பட்டிருப்பதால், மிக்ஸியில் அதிர்வோ அல்லது ஆட்டமோ ஏற்படுவதில்லை... இத்தனை சிறப்பம்சங்கள், எத்தனை குறைந்த விலையில்!

எனவே இன்றே நீங்களும்
புதிய ஃபோர்ப்ஸ் மிக்ஸர்
கிரைண்டர் வாங்கிப்
பாருங்கள்.

**அசர வைக்கும் அசல்**
**சுவை மீண்டும் பெறுங்கள்.**




**சிறப்பம்சங்கள்:**

★ 3 ஜார்கள் ★ மாற்றுவதற்கேற்ற 4 பிளேடுகள் ★ சிறப்பான கார்ட் வைண்டர் ★ கூடுதல் பாதுகாப்பிற்கு ரீசெட் ஸ்விட்ச் கொண்ட ஓவர்லோடு மோட்டார் புரொட்டெக்டர் ★ இண்டிகேட்டர் லேம்ப்

தயாரிப்பாளர்: FAL இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்
விற்பனை செய்வோர்:

LATHAM.

**லேதம் இண்டியா லிமிடெட்**

(ஃபோர்ப்ஸ் கோகக் குரூப்பின் கம்பெனி)
ஆர்த்தி சேம்பர்ஸ், மூன்றாம் மாடி,
189 அண்ணா சாலை, சென்னை-600 006.
போன்: 8524303, 8524222, 8524661
டெலக்ஸ்: 41-5247 ஃபேக்ஸ்: 044-8522012

விநியோகஸ்தர்கள்/டீலர்கள் விண்ணப்பிக்கவும்.

# .:.போர்ப்ஸ்
## மிக்ஸர் கிரைண்டர்

# பார்த்திபன் கனவு

## 13. சிவனடியார் கேட்ட வரம்

ராணி மூர்ச்சித்து விழுந்ததும், சற்று தூரத்தில் நின்ற தாதிமார் அலறிக் கொண்டு ஓடி வந்து அவளைச் சூழ்ந்தனர். சிவனடியார், "நில்லுங்கள்" என்று அவர்களைத் தடுத்து நிறுத்திவிட்டு, தமது கமண்டலத்திலிருந்து கொஞ்சம் தண்ணீர் எடுத்து அவளுடைய முகத்தில் தெளித்தார். உடனே மந்திர சக்தியால் எழுந்தது போல, அருள்மொழி கண் விழித்துச் சிவனடியாரைப் பார்த்தாள்.

"சுவாமி! எனக்கு என்ன நேர்ந்துவிட்டது?" என்று மெலிதான குரலில் கேட்டாள்.

"உனக்கு ஒன்றுமே நேரவில்லை, அம்மா! உன் மகனைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன். அவனுக்கு ஒரு குறைவும் நேராது என்றும், நிச்சயம் திரும்பி வருவான் என்றும் சொன்னேன்" என்றார் சிவனடியார்.

அருள்மொழி சற்று சிந்தனையில் ஆழ்ந்திருந்துவிட்டு, "இல்லை; ஏதோ ரொம்பவும் வேதனை தரும் செய்தி ஒன்றைச் சொன்னீர்கள்!" என்றாள்.

"சக்கரவர்த்தியின் மகளை உன் மகன் பார்க்க நேர்ந்தது என்று கூறினேன். அந்தச் செய்தி உனக்குச் சந்தோஷம் அளிக்குமென்று எண்ணினேன்...."

"ஆமாம்; நினைவு வருகிறது. ஆனால் அது சந்தோஷச் செய்தியா? சோழநாட்டின் மிகப் பெரிய விரோதி யாரோ, என்னுடைய பதியின் மரணம் எந்தக் கொடிய சத்துருவினால் ஏற்பட்டதோ, இன்று நான் இவ்விதம் ஆதரவற்று அநாதையாயிருப்பதற்கு யார் காரணமோ அப்பேர்ப்பட்ட பகைவனுடைய மகளைப் பார்த்தா என் மகன் மயங்கி விட்டான்? விக்கிரமன் உண்மையில் என் வயிற்றில் பிறந்த பிள்ளைதானா?...."

"கொஞ்சம் பொறு அருள்மொழி! அவசரப் பட்டுச் சாபங் கொடுக்காதே!" என்று சிவனடியார் சிறிது கலக்கத்துடன் கூறினார். அவர் மகா புத்திமானாயிருந்தும் அருள்மொழி இவ்வாறு பொங்குவாள் என்பதை எதிர்பார்க்கவில்லையென்று தோன்றியது.

"இதோ பார், அம்மா! உன்னுடைய தீராத கோபத்துக்கு ஆளான நரசிம்மவர்மனுடைய மகள் அந்தப் பெண் என்பது உன் மகனுக்குத் தெரியாது. அவர்கள் ஒருவரையொருவர் அருகில் நெருங்கியதும் இல்லை. தூரத்திலிருந்து ஒருவரையொருவர் பார்த்ததுதான்! அவர்களுக்குக் கலியாணமே நிச்சயமாகி விட்டதுபோல் நீ கலக்கமடைய வேண்டாம்!" என்றார் பெரியவர்.

"நல்லவேளை; என் வயிற்றில் பாலை வார்த்தீர்கள். எங்கே இதுவும் அந்தப் பல்லவ சக்கரவர்த்தியின் சூழ்ச்சியோ என்று நினைத்தேன். சுவாமி! விக்கிரமன் எங்கேயாவது கண் காணாத தேசத்தில் உயிர் வாழ்ந்திருக்கட்டும்; பசிக்கு உணவு இல்லாமலும் தாகத்துக்குத் தண்ணீர் இல்லாமலும், கஷ்டப்பட்டாலும் படட்டும்! ஆனால் அவன் திரும்பி வரவும் வேண்டாம்; எங்கள் பரம விரோதியினுடைய மகளின் மாய வலையில் விழவும் வேண்டாம்!"

"உன்னுடைய இருதய அந்தரங்கத்தை நன்றாகச் சோதித்துப் பார், அருள்மொழி! உன் மகன் சக்கரவர்த்தியின் மகளை மணம் புரிந்து கொள்ள வேண்டுமென்னும் விருப்பம் லவலேசமும் உனக்கு இல்லையா?..."

"அதெல்லாம் அந்தக் காலத்தில், சுவாமி!

தங்களிடம் சொல்லுவதற்கு என்ன? வெண்ணாற்றங்கரைப் போருக்கு முன்னால் அந்த மாதிரி ஒரு பைத்தியக்கார ஆசை என் மனத்தில் சில சமயம் தோன்றியதுண்டு. 'அவ்விதம் ஏற்பட்டால் சோழ வம்சத்துக்கும் பல்லவ குலத்துக்கும் உள்ள பகை தீர்ந்துவிடுமே!' - என்று நினைத்ததுண்டு. ஆனால், எப்போது என் பிராணநாதர் போர்க்களத்தில் உயிரை இழந்தாரோ, அந்த க்ஷணத்திலேயே அந்த ஆசையை வேருடன் களைந்து எறிந்து விட்டேன். இவ்வளவு நடந்துவிட்ட பிறகு என் மகன் சக்கரவர்த்தியின் மகளைக் கல்யாணம் செய்து கொள்வதைவிட, அவன் இறந்து விட்டான் என்ற செய்தியே எனக்கு மகிழ்ச்சியைத் தரும்!"

"அருள்மொழி! நீ அந்தக் குழந்தை குந்தவியைப் பார்த்ததில்லை; அதனால்தான் இப்படியெல்லாம் வெறுப்பாகப் பேசுகிறாய்..."

"தாங்கள் பார்த்திருக்கிறீர்களா, சுவாமி!"

"பார்த்திருக்கிறேன்; நெருங்கிப் பழகியுமிருக்கிறேன். என்னிடம் குந்தவிக்கு ரொம்பவும் பக்தி விசுவாசமுண்டு, அம்மா! சிவஞான இன்பத்தின் சுவை கண்ட எனக்கு இந்தக் காலத்தில் வேறு எதன் மீதும் பற்று கிடையாது. ஆனால் அந்தக் குழந்தையின் பாசம் மட்டும் போக மாட்டேன் என்கிறது. அவளோடு இரண்டு நாள் பழகிவிட்டால் நீயும் அவ்விதந்தான் அவளிடம் பாசம் வைப்பாய்...."

"வேண்டாம்! எனக்கு ஒருவரையும் இனிமேல் பார்க்க வேண்டாம்; பழகவும் வேண்டாம். இந்த உலகை விட்டுச் சென்று என் பதியை மீண்டும் அடையும் நாளை நான் எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறேன்...."

"அருள்மொழி! ஒரு காலத்தில் என்னை நீ ஒரு வரம் கேட்டு வாங்கிக் கொண்டாய். அதன்படியே உன் மகனுடைய உயிரைக் காப்பாற்றினேன். உன் பதியின் மரணத் தறுவாயில் நான் அளித்த வாக்கையும் நிறைவேற்றினேன். இதெல்லாம் உண்மையா, இல்லையா?"

"ஆமாம், உண்மைதான்."

"அதற்கெல்லாம் பிரதியாக இப்போது நான் உன்னிடம் ஒரு வரம் கேட்கப் போகிறேன். அதை நீ தட்டாமல் கொடுக்க வேண்டும்."

"சிவ சிவா!" என்று சொல்லிக் கொண்டு அருள்மொழி எழுந்து கைகூப்பி நின்றாள்.

"சுவாமி! இவ்விதம் என்னை அபசாரத்துக்கு உள்ளாக்கலாமா? அடியாளிடம் தாங்கள் வரம் கேட்பதா? எனக்குக் கட்டளையிட வேண்டியவர், தாங்கள்!" என்றாள்.

"சரி கட்டளையிடுகிறேன். அதைத் தட்டாமல் நிறைவேற்ற வேண்டும்."

"தங்களுடைய வார்த்தையை நான் தட்டுவேனா? ஒருநாளும் இல்லை."

"அப்படியானால் சொல்லுகிறேன், கேள்! என்றைக்காவது ஒருநாள் சக்கரவர்த்தியின் மகள் குந்தவி உன்னிடம் வருவாள். அவள் தாயில்லாப் பெண். தாயின் அன்பு இன்றி அவளுடைய இருதயம் உலர்ந்து போயிருக்கிறது. அதனால்தான் அம்மா, எனக்குக் கூட அவள்மேல் அவ்வளவு பாசம். அந்தக் குழந்தை உன்னிடம் வரும்போது அவளை நீ நிராகரிக்காதே. அன்புடன் உன் மகளைப் போல் ஏற்றுக் கொள். உன் மனப்புண் ஆறுவதற்கும் அது அனுகூலமாயிருக்கும்!" என்றார் சிவனடியார். அவருடைய கனிவு ததும்பிய குரலும் வார்த்தைகளும் அருள்மொழியின் மனத்தை உருக்கிவிட்டன.

"தங்கள் ஆணைப்படி நடக்க முயற்சி செய்கிறேன், சுவாமி! ஆனாலும், எங்கள் குலத்துக்கே ஜன்ம சத்துருவான ஒருவருடைய மகளிடம் நான் அன்பு செலுத்துவது எப்படி?...."

"தந்தை செய்த தீங்குக்காக மகளை வெறுப்பது என்ன நியாயம், அம்மா? மேலும் இன்னொரு விஷயம் சொல்லுகிறேன், கேள். உன் மகனுடைய உயிரைக் காப்பாற்றும் விஷயத்தில் குந்தவிதான் எனக்கு மிகவும் ஒத்தாசையாயிருந்தாள். விக்கிரமனுக்கு மரண தண்டனை நேராமல் தடுப்பதற்கு அவள் எவ்வளவு பிரயத்தனம் செய்தாள் தெரியுமா? இதுநாள் வரையில் தந்தையின் வார்த்தைக்கு மறுவார்த்தை பேசி அறியாதவள், விக்கிரமனுக்காகச் சக்கரவர்த்தியிடம் எவ்வளவோ சண்டை பிடித்தாள்...."

"அப்படியா, சுவாமி? அந்தக் குழந்தையைப் பார்க்க வேண்டுமென்று எனக்கும் ஆசை உண்டாகிறது. ஆனால், அவள் எதற்காக இந்த அபாக்கியசாலியைத் தேடிக் கொண்டு வரப்போகிறாள்?"

"இல்லை, அம்மா! இல்லை. நீ அபாக்கியசாலி இல்லை. விக்கிரமனைப் போன்ற வீரப் புதல்வனைப்



பெற்ற உன்னை அபாக்கியசாலி என்று சொல்ல முடியுமா? குந்தவியும் உன்னைத் தேடிக் கொண்டு வரத்தான் போகிறாள்; சீக்கிரத்திலேயே வருவாள்!'' என்றார் சிவனடியார்.

## 14. "வயதான தோஷந்தான்!"

அந்த நாளில் தமிழகத்தில் சைவ சமயமும் வைஷ்ணவ சமயமும் புத்துயிர் பெற்றுத் தளிர்க்கத் தொடங்கியிருந்தன. இவ்விரு சமயங்களிலும் பெரியார்கள் பலர் தோன்றி திவ்ய ஸ்தல யாத்திரை என்ற விஜயத்தில் தமிழ் நாடெங்கும் யாத்திரை செய்து, பக்திச் சுடர் விளக்கு ஏற்றி, ஞான ஒளியைப் பரப்பி வந்தார்கள். அழுதொழுகும் தமிழில் கவிதா ரஸமும் இசை இன்பமும் ததும்பும் தெய்வீகப் பாடல்களை இயற்றி வந்தார்கள்.

அந்நாளில் தமிழகத்தில் வாழ்ந்து வந்த சைவப் பெரியார்களுக்குள்ளே திருநாவுக்கரசர் இணையற்ற மகிமையுடன் விளங்கினார். மகேந்திரவர்ம சக்கரவர்த்தியின் காலத்திலேயே பிரசித்தி அடைந்து, தமிழகத்தின் போற்றுதலுக்கு உரியவராகிவிட்ட அப்பர் சுவாமிகள், விக்கிரமன் நாடு கடத்தப் பட்ட போது, முதிர்ந்த மூப்பின் காரணமாக அதிகமாய் நடமாடவும் இயலாத தள்ளாமையை அடைந்திருந்தார். அந்தத் தள்ளாத பிராயத்திலும் அவர் ஸ்தல யாத்திரை சென்றிருந்து சமீபத்தில் திரும்பி வந்திருக்கும் செய்தியைக் குந்தவிதேவி அறிந்தாள். அப்பெரியாரைத் தரிசிப்பதற்காகக் காஞ்சியில் பிரசித்தி பெற்று விளங்கிய சைவ மடாலயத்துக்கு ஒருநாள் அவள் சென்றாள்.

முதிர்ந்து கனிந்த சைவப் பழமாக விளங்கிய அப்பர் சுவாமிகள், சக்கரவர்த்தியின் திருமகளை அன்புடன் வரவேற்று ஆசி கூறினார்.

அவரைப் பார்த்துக் குந்தவி, "சுவாமி! இவ்வளவு தள்ளாத நிலைமையில் எதற்காகத் தாங்கள் பிரயாணம் செய்ய வேண்டும்? தாங்கள் தரிசிக்காத ஸ்தலமும் இருக்கிறதா? எங்கே போயிருந்தீர்கள்?" என்று கேட்டாள்.

அதற்கு அப்பர், "குழந்தாய்! தில்லைப்பதி வரையிலேதான் போயிருந்தேன். பொன்னம்பலத்தில் ஆடும் பெருமானை எத்தனை தடவை தரிசித்தால்தான் என்ன? இன்னுமொருமுறை கண்ணாரக் கண்டு இன்புற வேண்டுமென்ற ஆசை உண்டாகத்தான் செய்கிறது. ஆகா! அந்த ஆனந்த நடனத்தின் அற்புதத்தைத்தான் என்னவென்று வர்ணிப்பேன்! அந்தப் பேரானந்தத்தை அனுபவிப்பதற்காக மீண்டும் மீண்டும் மனிதப் பிறவி எடுக்கலாமே!'' என்று கூறிவிட்டு, பாதி மூடிய கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக, பின்வரும் பாசுரத்தைப் பாடினார் :-

*"குனித்த புருவமும், கொவ்வைச் செவ்*
*வாயில் குமிழ் சிரிப்பும்*
*பனித்த சடையும் பவளம் போல்*
*மேனியில் பால் வெண்ணீறும்*
*இனித் தமுடைய எடுத்த பொற்*
*பாதமும் காணப்பெற்றால்*
*மனித்தப் பிறவியும் வேண்டுவதே*
*இந்த மாநிலத்தே!''*

பாட்டு முடிந்த பிறகும் அப்பர் சுவாமிகள் சற்று நேரம் மெய்ம் மறந்து பரவச நிலையில் இருந்தார். முன்பெல்லாம் இப்படிப் பட்ட சந்தர்ப்பத்தில் குந்தவி பக்திப் பரவசமடைந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கியிருப்பாள். ஆனால், இன்றைக்கு அவள் மனம்



அவ்வாறு பக்தியில் ஈடுபடவில்லை.

அப்பர் ஒருவாறு சுய உணர்வு அடைந்த போது குந்தவி அவரை நோக்கி, "சுவாமி சோழ நாட்டில் யாரோ ஒரு சிவனடியார் புதிதாகத் தோன்றி ராஜரீகக் காரியங்களி லெல்லாம் தலையிடுகிறாராமே, தங்களுக்கு அவரைத் தெரியுமா?" என்று வினவினாள்.

அவளுடைய வார்த்தைகளை அரை குறையாகவே கேட்ட அப்பெரியார், "என்ன, குழந்தாய்! சோழ நாட்டில் தோன்றியிருக்கும் சிவனடியாரைப் பற்றிக் கேட்கிறாயா? ஆகா அவரைப் பார்க்கத்தானே, அம்மா, நான் முக்கியமாக யாத்திரை கிளம்பினேன்? நான் அவரைப் பார்க்க வருகிறேன் என்று தெரிந் ததும் அவரே என்னைத் தேடிக் கொண்டு புறப்பட்டார். தில்லைப் பதியிலே நாங்கள் சந்தித்தோம். ஆகா! அந்தப் பிள்ளைக்கு 'ஞானசம்பந்தன்' என்ற பெயர் எவ்வளவு பொருத்தம்! பால் மணம் மாறாத அந்தப் பாலருக்கு, எப்படித்தான் இவ்வளவு சிவ ஞானச் செல்வம் சித்தியாயிற்று? என்ன அருள் வாக்கு! அவர் தாய்ப் பால் குடித்து வளர்ந்த பிள்ளை இல்லை, அம்மா! ஞானப்பால் குடித்து வளர்ந்த பிள்ளை! - இல்லாவிட் டால் முகத்தில் மீசை முளைப்பதற்குள்ளே இப்படிப்பட்ட தெய்வீகப் பாடல்களை வெள்ளமாகப் பொழிய முடியுமா?...." என் றெல்லாம் அப்பர் பெருமான் வர்ணித்துக் கொண்டே போனார்.

குந்தவி பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள். கடைசியில் குறுக்கிட்டு, "சுவாமி! நான் ஒருவரைப் பற்றிக் கேட் கிறேன். தாங்கள் இன்னொருவரைப் பற்றிச் சொல்லு கிறீர்கள். நான் சொல்லும் சிவ னடியார், முகத் தில் மீசை முளைக் காதவரல்ல; ஜடா மகுட தாரி; புலித்



## அருள் வாக்கு



**ம**ரயானைப் பொம்மையைப் பார்த்தால் குழந்தை அது யானை என்றே எண்ணுகிறது. பெரியவர்களுக்கு அது யானை மாதிரி இருந்தாலும் மரம்தான் என்று தெரிகிறது. குழந்தைக்கு மரம் மறைந்து யானை தெரிகிறது; பெரியவர்களுக்கு யானை மறைந்து மரம் தெரிகிறது. இப்படியே பார் (உலகம்) முதலாக பஞ்ச பூதங்களும் பரமாத்மா என்ற மரத்தால் பண்ணின பொம்மைதான். பரமாத்மாதான் இத்தனையும் என்று நாம் பார்க்க வேண்டும்.

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம்

என்று திருமூலர் சொன்னபடி, பஞ்ச பூதங்களையே பார்த்துக் கொண்டு, அதன் காரணமான பரமாத்மாவை மறந்திருப்பதை விட்டு, இவற்றால் பரமாத்மா மறைந்து போக விடாமல், இவற்றிலும் வியாபித்திருப்பது பரமாத்மாதான் என்று, அனைத்தையும் ஈச்வர வியாபகமாகப் பார்க்கவேண்டும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

தோல் போர்த்தவர்" என்றாள்.

"குழந்தாய்! நீ யாரைப் பற்றிக் கேட்கிறாயோ எனக்குத் தெரியாது! ஜடாமகுடத்துடன் புலித்தோல் தரித்த சிவனடியார்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள்; இந்த மடாலயத்திலேயே நூறு பேருக்கு மேல் இருப்பார்கள். வேறு ஏதாவது அடையாளம் உண்டானால் சொல்லு!" என்றார் நாவுக்கரசர்.

"நான் சொல்லுகிற சிவனடியார் ராஜரீக விஷயங்களில் எல்லாம் தலையிடுவாராம். என்னுடைய தந்தைக்கு விரோதமாகக் கலகங்களை உண்டு பண்ணிக் கொண்டிருக்கிறாராம்...."

"என்ன சொன்னாய், அம்மா! அதிசயமாயிருக்கிறதே! அப்படிப்பட்ட சிவனடியார் யாரையும் எனக்குத் தெரியாது. சைவத்தையும் வைஷ்ணவத்தையும் இரு கண்களைப் போல் காத்து வளர்த்து வருகிறவராயிற்றே உன் தந்தை! நரசிம்மவர்ம சக்கரவர்த்தியின் ஆட்சியில் சிவனடியார்கள் எதற்காக ராஜரீகக் காரியங்களில் ஈடுபடவேண்டும்? அதுவும் உன் தந்தைக்கு விரோதமாகக் கலகத்தைக் கிளப்புவதா? வேடிக்கைதான்! அப்படி யாராவது இருந்தால், அவன் சைவனாகவோ, வைஷ்ணவனாகவோ இருக்க மாட்டான். பாஷாண்ட சமயத்தான் யாராவது செய்தால் தான் செய்யலாம்."

"நான் போய் வருகிறேன், சுவாமி!" என்று குந்தவி அவருக்கு நமஸ்கரித்து விடை பெற்றுக் கொண்டு கிளம்பினாள்.

பல்லக்கில் ஏறி அரண்மனைக்குப் போகும்போது அவள் பின்வருமாறு எண்ணமிட்டாள் :-

"முதுமை வந்து விட்டால் எவ்வளவு பெரியவர்களானாலும் இப்படி ஆகிவிடுவார்கள் போலிருக்கிறது. பேச ஆரம்பித்தால் நிறுத்தாமல் வளவளவென்று பேசிக் கொண்டே போகிறார்! கேட்டதற்கு மறுமொழி உண்டா என்றால், அதுதான் கிடையாது! எல்லாம் வயதான தோஷந்தான்!"

## 15. கடற் பிரயாணம்

**இ**ளவரசன் விக்கிரமனை ஏற்றிக் கொண்டு கிளம்பிய கப்பல் சீக்கிரத்திலேயே வேகம் அடைந்து கிழக்கு நோக்கிச் செல்லத் தொடங்கியது. சிறிது நேரத்துக்கெல்லாம் மாமல்லபுரத்துக் கடற்கரையும், கோவில் கோபுரங்களும், மரங்களின் உச்சிகளும் மறைந்து விட்டன. கரை ஓரத்தில் வெண்மையான நுரைகளுடனும் இரைச்சலுடனும் எழுந்து விழுந்து கொண்டிருந்த சிற்றலைகள் இப்போது காணப்படவில்லை. கடல் நீர், தூய நீல நிறமாயிருந்தது. அந்த நீல நிறப் பரப்பிலே பெரும் பள்ளங்களும் மேடுகளும் மாறி மாறித் தோன்றும்படியாகப் பேரலைகள் பெருமூச்சு விட்டுக் கொண்டு மேலே எழும்பியும் கீழே விழுந்தும் அவதிப் பட்டுக் கொண்டிருந்தன. அதே சமயத்தில் துயரம் நிறைந்த 'ஹோ' என்ற இடைவிடாத புலம்பல் ஒலியும் கேட்டுக் கொண்டிருந்தது.

இவ்விதம் விக்கிரமன் வெளியே கண்ட காட்சியானது அவனுடைய உள்ளத்தின் நிலைமையைப் பிரதிபலிப்பதாயிருந்தது.

VISWAPRIYA'S

# PRIME INVEST

## THE ULTIMATE IN SAFETY

## PRIME INVEST

'AAA'

THE UNDOUBTED WINNER AS ALWAYS

'AA'




**19.56% P.A.**
**1 Year Investment**

**NO TDS**

## VISWAPRIYA FINANCIAL SERVICES & SECURITIES LTD.

- K.R. Buildings, L.B. Road, Adyar, Madras 600 020. Tel. 419801/419112/419250/415441
- 232, 5th Street, Gandhipuram, Coimbatore 641 012. Tel.: 444208

*Forms also available with :* **ARKAY INVESTMENT & CONSULTANCY SERVICES (P) LTD.** A-100, III Avenue, I Floor, Anna Nagar, Madras 600 102 Tel.: 6262553 ❑ 23, Rameswaram Road, T. Nagar, Madras 600 017 Tel.: 4345101, 4345263 ❑ **INTEL INVESTOR SERVICES (P) LTD. (HO)** 17, Luz Avenue, Mylapore, Madras 600 004.

*Branches :* 36, Krishnaswamy Avenue, Luz, Mylapore Tel.: 4995133 ❑ Sunitha Complex, 1st Floor, 14 Rameswaram Road, T. Nagar Tel.: 4342456 ❑ Sai Nivas, 88-B, 2nd Main Road, Nanganallur Tel.: 2347421 ❑ Sivananth Buildings, Shop No.15, X-41, 2nd Avenue, Anna Nagar Tel.: 6212446 ❑ TRICHY B-4, Chitra Complex, Chinthamani, Trichy 620 002 Tel.: 24084 ❑ COIMBATORE 58, Sengupta Road, Ram Nagar, Coimbatore 641 009 Tel.: 230756, 234667 ❑ NEYVELI Hotel Blue Diamond ❑ BANGALORE R.S. Plaza, 'Ground Floor – Rear End, 454, Sampige Road (bet.) 6 & 7th Cross, Malleswaram, Bangalore 560 003 Tel.:363937, Indira Nagar Tel.: 569064 ❑ PICHAI & ASSOCIATES, Trichy Tel.: 52902 ❑ V. KRISHNAMOORTHY, Chitoor Tel.: 23649.

**Better Than 'AAA'**

கடலின் ஆழத்தில் குடிகொண்டிருக்கும் எல்லையற்ற மோன அமைதியைப் போல், அவனுடைய இருதயத்தின் அடிவாரத்திலும் விவரிக்கவொண்ணாத பரிபூர்ண சாந்தி நிலவிற்று. அதே சமயத்தில் அவனுடைய உள்ளத்தின் மேற்பரப்பில் என்னவெல்லாமோ எண்ணங்கள் அலை அலையாக எழுந்து கொந்தளிப்பை உண்டாக்கின.

பார்த்திப மகாராஜா சோழ நாட்டின் மேன்மையைக் குறித்துத் தாம் கண்ட கனவுகளைப் பற்றிச் சொன்னதெல்லாம் ஒவ்வொன்றாக ஞாபகம் வந்தன. கடற்பிரயாணம் செய்ய வேண்டுமென்று இளம் பிராயத்திலிருந்து அவனுடைய மனதில் குடிகொண்டிருந்த ஆசையும் நினைவுக்கு வந்தது. அந்த ஆசைதான், அடடா என்ன வினோதமான முறையில் இன்று நிறைவேறுகிறது? புலிக் கொடி கம்பீரமாகப் பறக்கும் பெரிய பெரிய கப்பல்களில் சோழநாட்டு வீரர் படைகளுடன் பிரயாணம் செய்து கடல்களுக்கப்பாலுள்ள தேசங்களிலெல்லாம் வெற்றிக் கொடி நாட்ட வேண்டுமென்ற மனோரதத்துக்கும், இன்று பல்லவர்களின் சிங்கக் கொடி பறக்கும் கப்பலில் கையும் காலும் சங்கிலியால் கட்டுண்டு தேசப் பிரஷ்டனாய்ப் பிரயாணம் செய்வதற்கும் எவ்வளவு தூரத்துக்கு எவ்வளவு தூரம்!

இப்படி விக்கிரமன் சிந்தித்துக் கொண்டிருந்த போதே கப்பலின் தலைவன் சில ஆட்களுடன் அங்கு வந்து விக்கிரமனைப் பிணித்திருந்த சங்கிலிகளை எடுக்கச் செய்தான். "இது ஏன்?" என்று விக்கிரமன் வினவ, "சக்கரவர்த்தியின் ஆணை" என்றான் கப்பல் தலைவன். "என்னை எங்கே கொண்டு போகிறீர்கள்?" என்று விக்கிரமன் கேட்டதற்கு, "இங்கிருந்து பன்னிரண்டு நாள் பிரயாணத்தில் நடுக் கடலிலே ஒரு தீவு இருக்கிறது. அதன் அருகே தங்களை இறக்கி விட்டுவிட வேண்டுமென்று கட்டளை!" என்று மறுமொழி வந்தது. "அங்கே வசிப்பவர்கள் யார்?" என்று விக்கிரமன் மேலும் கேட்டான். "அதெல்லாம் எங்களுக்கு ஒன்றும் தெரியாது. தீவுக்குப் போய்ச் சேரும் வரையில், இந்தக் கப்பலுக்குள்ளே தாங்கள் சுயேச்சையாக எங்கு வேண்டுமானாலும் போகலாம், ஆனால் தப்பிச் செல்வதற்கு மட்டும் யத்தனம் செய்யக் கூடாது; செய்தால் மறுபடியும் தளையிடும்படி நேரும்" என்றான் கப்பல் தலைவன்.

**வி**க்கிரமன் கப்பலுக்குள்ளே அங்குமிங்கும் சிறிது நேரம் அலைந்தான். மாலுமிகளுடன் பேச்சுக் கொடுக்கப் பார்த்ததில் ஒன்றும் பிரயோஜனம் ஏற்படவில்லை. அவர்கள் எல்லாரும் விக்கிரமன் சம்பந்தப்பட்டவரை ஊமைகளாகவேயிருந்தனர். பின்னர், கப்பல் மேல் தளத்தின் ஓரமாக அவன் வந்து, வானையும் கடலையும் நோக்கியவண்ணம் முன்போலவே சிந்தனையில் ஆழ்ந்தான்.

அன்னை அருள்மொழியின் நினைவுதான் எல்லாவற்றிற்கும் முன்னால் நின்றது. அவர் இச்சமயம் என்ன செய்து கொண்டிருப்பார்? என்ன எண்ணிக் கொண்டிருப்பார்? தன்னுடைய முயற்சி நிஷ்பலனாய்ப் போனது பற்றி ஏமாற்றமடைந்திருப்பாரா? பல்லவ சக்கரவர்த்தியின் முன்னிலையிலே தான் சிறிதும் பணிந்து போகாமல் பேசிய வீர வார்த்தைகளைக் கேட்டுப் பெருமையடைந்திருப்பாரா? தன்னுடைய பிரிவைக் குறித்து வருத்தப்படுவாரா? எப்படியும் அவருக்கு ஆறுதல் கூறச் சிவனடியார் போயிருப்பாரல்லவா?

உடனே, சிவனடியாரின் ஞாபகம் வந்தது. கப்பல் கரையை விட்டுக் கிளம்பிய தருணத்தில் அந்தப் பெரியவர் எங்கிருந்தோ வந்து குதித்துத் தமது இருக்கரத்தை நீட்டி ஆசீர்வாதம் செய்தாரே? அவருக்குத்தான் நம்மிடத்தில் எவ்வளவு அன்பு!

சிவனடியாரைப் பற்றி நினைக்கும் போதே மற்றோர் உருவம் விக்கிரமனுடைய மனக்கண் முன் தோன்றியது. அது ஒரு பெண்ணின் உருவம். முதல் நாள் காஞ்சிபுரத்து வீதியில் பார்த்த அந்தப் பெண் மறுநாள் மாமல்லபுரத்துக் கடற்கரைக்கு எப்படி வந்தாள்? அவள் யாராயிருக்கும்? ஆகா! அவளுடைய கண்கள்தான் எவ்வளவு நீண்டு படர்ந்திருந்தன? அந்தக் கண்களிலே கண்ணீர் துளித்து நின்ற காரணம் என்ன? தன்னிடத்தில் உள்ள இரக்கத்தினாலா? முன்பின் தெரியாத அந்தப் பெண்ணுக்குத் தன்மேல் இரக்கம் உண்டாவானேன்? இல்லாவிட்டால் தன்னை எதற்காக அவ்வளவு கனிவுடன் பார்க்க வேண்டும்?

இப்படி வெகு நேரம் அவளைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்த விக்கிரமன், சூரியன் மறைந்து நாலு புறமும் இருள் சூழ்ந்ததைக்கூடக் கவனிக்கவில்லை. தற்செயலாகக் கீழே கடலை நோக்கியபோது விண்மீன்கள் தண்ணீரில் பிரதிபலிப்பதைக் கண்டு திடுக்கிட்டான். அத்தனை நேரமும் முன்பின் தெரியாத அந்தப் பெண்ணைப் பற்றியே தான் சிந்தித்துக் கொண்டிருந்ததை நினைத்துச் சிறிது வெட்கமடைந்தான். பிறகு பொன்னனையும் வள்ளியையும் பற்றி எண்ணினான். அவர்களுக்குத் தன் பேரில் எவ்வளவு



சைக்கிளில் பள்ளிக்கூடங்களுக்குச் செல்லும் பிள்ளைகளுக்கும் ஹெல்மெட் போடுவதை ஜெர்மன் நாட்டில் அறிமுகம் செய்துள்ளார்கள். குழந்தைகள் தப்பித் தவறி சைக்கிள் விபத்தில் சிக்கினாலும் பெரிய காயம் இல்லாமல் தப்பித்துக் கொள்கிறார்கள். பள்ளிப் பிள்ளைகள் விரும்பி அணிகிறார்கள்.

- ஆர். ஆர். பூபதி

---

பிரியம்? இந்த நேரமெல்லாம் அவர்கள் தன்னைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பார்கள். அல்லது ஒரு வேளை வள்ளியின் பாட்டனைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கலாம். அந்தக் கிழவனுக்குத்தான் என்ன தைரியம்? சோழநாட்டு ஆண் மக்களெல்லாம் அவனைப் போன்ற வீரர்களாயிருக்கக் கூடாதா?

இருட்டி ஒரு ஜாமம் ஆனபோது, நீலக் கடலைச் செம்பொற் கடலாகச் செய்து கொண்டு கீழ்வானத்தில் சந்திரன் உதயமானான். பூரண சந்திரனில்லை; முக்கால் சந்திரன்தான். பார்ப்பதற்கு ஒரு பெரிய பொற்கிண்ணம் கடலிலிருந்து வெளிக் கிளம்புவது போலிருந்தது. முன்னம் பாற் கடலைக் கடைந்த போது இந்தச் சந்திரனாகிய பொற்கிண்ணத்திலேதான் அமுதம் வந்ததோ, என்னவோ? இன்றும் அப்பொற் கிண்ணத்திலிருந்து நிலவாகிய அமுதம் பொங்கிப் புவனமெல்லாம் பரவியதாகத் தோன்றியது.

இந்த மோகனக் காட்சியை விக்கிரமன் பார்த்தான். கடலிலிருந்து எழும்பிய சந்திர பிம்பத்துடனேகூட அவனுடைய மனக் கண்ணின் முன்னால் அந்தப் பெண்ணின் முகமும் மறுபடி எழுந்தது. இந்த உதய சந்திரனுடைய பொன்னிறந்தான் அவளுடைய முகத்தின் நிறமும்!

"ஆகா! அது என்ன அழகான முகம்!" என்ற எண்ணம் அப்போது விக்கிரமனுக்கு முதன் முதலாகத் தோன்றியது. அந்தப் பொன் முகத்தின் அழகை அதைக் கவிந்திருந்த கருங்கூந்தல் எவ்வளவு நன்றாய் எடுத்துக் காட்டிற்று! ஆம்; நிகரில்லாத சௌந்தரியம் வாய்த்தவள் அந்தப் பெண். சித்திரத்திலும் சிலையிலும் கூட அத்தகைய திவ்ய சௌந்தரியத்தைக் காண்பது அரிது நான். அவள் யாராயிருக்கும்?

**ப**ன்னிரண்டு தினங்கள் சென்றன. அடிக்கடி குந்தவியைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்திருந்த விக்கிரமனுக்கு இந்தப் பன்னிரண்டு தினங்கள் போனதே தெரியவில்லை. பதின்மூன்றாம் நாள் பொழுது விடிந்த போது சூரியோதயமான திசையில் விக்கிரமன் கண்ட காட்சி அவனை ஆச்சரியக் கடலில் மூழ்கடித்தது. ஏனெனில் வழக்கம் போல் சூரியன் சமுத்திரத்திலிருந்து கிளம்பி ஜோதிப் பிழம்பாய் மேலே வருவதற்குப் பதிலாக, பச்சை மரங்களுக்குப் பின்னால் உதயமாகி மேலே ஒளிக்கிரணங்களைப் பரப்பினான். இந்த அபூர்வக் காட்சியைப் பார்த்துக் கொண்டு விக்கிரமன் நிற்கும் போதே கப்பல் தலைவன் அவனை நெருங்கி, "இளவரசே! அதோ தெரிகிறதே, அந்தத் தீவின் அருகில்தான் தங்களை விட்டுவிடும்படி எங்களுக்குக் கட்டளை. தங்களுக்கு நீந்தத் தெரியுமல்லவா?" என்றான்.

"கரைக்கு எவ்வளவு தூரத்தில் விடுவீர்கள்?"

"ரொம்ப தூரத்தில் விடமாட்டோம். ஒத்தாசைக்கு ஒரு மரக்கட்டையும் போடுவோம்."

"நான் இறங்க மாட்டேன் என்றால் என்ன செய்வீர்கள்?"

"மரக்கட்டையில் கட்டி மிதக்க விட்டு விடும்படி கட்டளை. தங்களுடைய விருப்பம் என்ன?"

"நானே இறங்கி விடுகிறேன்" என்றான் விக்கிரமன்.

அவ்வாறே கப்பல் இன்னும் சிறிது கரையை நெருங்கியதும், விக்கிரமனைக் கடலில் இறக்கிவிட்டு ஒரு மரக்கட்டையையும் போட்டார்கள். விக்கிரமன் அதைப் பிடித்துக் கொண்டு சிறிது நேரம் நீந்தியும், சிறிது நேரம் அதன்மேல் உட்கார்ந்து மிதந்தும், கரையை நோக்கிச் சென்றான். கரையை நெருங்க நெருங்க, தூரத்தில் கப்பலிலிருந்து பார்த்த போது எறும்புக்கூட்டம் மாதிரி காணப்பட்டது உண்மையில் மனிதர்கள் கூட்டமே என்று தெரிய வந்தது.

அந்த மனிதர்கள் யார்? எதற்காகக் கடற்கரையில் வந்து கூடியிருக்கிறார்கள்? அவர்கள் என்ன பாஷை பேசுவார்கள்? சக்கரவர்த்தி தன்னை இந்தத் தீவில் விட்டு வரச் சொன்னதின் நோக்கம் என்ன? - இப்படிப் பற்பல எண்ணங்கள் விக்கிரமனுடைய மனத்தில் அலை அலையாக எழுந்தன.

(தொடரும்)

# 1995
# புத்தாண்டு தரும் செய்தி என்ன?

**ஆண்டொன்று போனால்**
**வயதொன்று போகும்**
**நேரம் நிற்பதில்லை**
**தாமதிக்க நேரமில்லை !**

இலக்குகளை எட்டிப்பிடித்திட இன்றே செயல் படுங்கள். உங்களை நாடிவரும் நல்ல வாய்ப்புகளை நழுவவிடாதீர்கள்! ஆங்கிலம் தெரியாத ஒரே காரணத்தினால், உங்களது முன்னேற்றம் தடைபட இனியும் அனுமதிக்காதீர்கள் !

நான்கு லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் சேர்ந்து பயனடைந்துள்ள **விவேகானந்தா** வின் தபால்முறை பயிற்சியில் சேர்ந்து ஆங்கிலமொழியைச் சுலபமாகக் கற்றுக் கொள்ளுங்கள். மிகச்சரளமாகப் பேசத் தொடங்குங்கள் !

**"இப்புத்தாண்டு உங்கள் வாழ்க்கையில்ஒரு திருப்பு முனையாக அமையட்டும்"**

இன்றே ஒரு போஸ்ட் கார்டில் உங்களது முகவரியை எழுதி அனுப்புங்கள் பயிற்சி பற்றிய விவரங்களை உடனே அனுப்பிவைக்கிறோம்.

"Wish you a Happy and Successful NEW YEAR"

உங்களது வெற்றியின் முகவரி

**விவேகானந்தா கல்வி நிலையம்**

தபால்பெட்டிஎண் KI 4986,
9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை-600 017

நேர்முகப்பயிற்சியும் உண்டு
(பெண்களுக்குத் தனிவகுப்புகள்)
போன் 4341216, 4347034

# கே. ஆர். முரளி

என்னை மன்னித்ததன் மூலம் நான் எவ்வளவு பெரிய பாபம் செய்து விட்டேன் என்பதை காயத்ரி நிரூபித்துக் காட்டி விட்டாள்.

காலையில் வீட்டிற்குள் நுழையும்போதே குறுகுறுப்பு. இவளுக்கு எல்லாம் தெரிந்து விட்டது. ஆபீஸில் மடையன் ரகுநாதன் காலையிலேயே என்னிடம் சொல்லி விட்டான்.

"டேய், கிளம்பும்போதே சொன்னேன், கேட்காம போனியே, இந்த மாதிரி புத்தி ஒனக்கு ஏண்டா போச்சு" என்று ஆரம்பித்த போதே எனக்குப் புரிந்து விட்டது. இன்று ஒரு கலவரம் உண்டு என்று அப்போதே புரிந்து விட்டது.

நேற்று இரவு குழந்தைக்கு ஏதோ மூச்சுத் திணறல். மருந்து தந்தவுடன் சரியாகப் போய் விட்டது. இருந்தாலும், தனியாக இருக்க மனம் கொள்ளாமல், நைட் டூட்டி என்று நான் சொல்லி விட்டு வந்திருந்ததால் ஆபீஸுக்கு எனக்குப் போன் செய்திருக்கிறாள்.

நான் ஆபீஸில் இல்லை. போனை எடுத்தவன் ரகுநாதன். அவனுக்கு என்னை எல்லாமாகத் தெரியும். ஆபீஸில் கிளம்பும் போதே ஆயிரம் அட்வைஸாய்த் தடுத்தவன், காயத்ரியிடமிருந்து போன் என்றவுடன், படபடப்பாகி விட்டான். இருந்தாலும், விஷயங்களைக் கேட்டுக் கொண்டவன், நான் டீ சாப்பிட வெளியில் போயிருப்பதாய்ச் சொல்லி, வந்தவுடன் தெரிவித்து விடுவதாகப் போனை வைத்து விட்டான். காயத்ரியிடம் அவனுக்கு நிரம்ப மரியாதை. பாசம். நானோ ஆபீஸில் இல்லை. போயிருக்கும் கண்றாவியோ அவனுக்குத் தெரியும். இருந்தாலும் என்னைக் காப்பாற்றி விட்டான்.

ஆனால் அந்த நிம்மதி வெகுநேரம் இல்லை. அரைமணிக்கெல்லாம் மறுபடியும் போன்; மறுபடியும் காயத்ரி; மறுபடியும் இவன் அதே காரணம். ஆனால் இந்த தடவை காயத்ரி போனில், "ரகு அண்ணா, எனக்குத் தெரியும், எனக்கு ஏதோ மனகல உறுத்தல். நீங்க கூடவா பொய் சொல்லணும்?" என்று அழுதிருக்கிறாள்.

"எனக்குக் கவலையா இருக்கு. அவர் ஏன் என்கிட்ட பொய் சொல்லணும்" என்று அழுத அவளிடம், இந்தப் பாவி உண்மையை உடைத்து விட்டான்.

"நான் எத்தனையோ கண்டித்தேன். கேட்கலை. சில நாளா தப்பான சகவாசம். இன்னிக்கி, என்ன சொல்லியும் கேட்காம போயிட்டான்" என்று ஆரம்பித்து என் சபலத்தை போனில் உடைத்து விட்டான்.



காலையில், வீடு திரும்பும் முன், அவனுக்கு நான் போன் செய்த போது, இதை என்னிடம் சொன்னவுடனேயே, "தப்பு பண்ணிட்டியே ரகு" என்று பதறினேன்.

"யார்" என்றவன், "காயத்ரி மாதிரி ஒருத்திக்கு நீ பண்றது பாபம்" என்றான்.

மேலே பேச வந்தவனை நான் குறுக்கிட்டு, "உனக்குத் தெரியாது. அவ இத கலவரமாக்கிடுவா. அவளைப் பத்தி உனக்கே தெரியும், நீ ஒரு உண்மையான நண்பனா இருந்திருந்தா என்கிட்டதான் பேசியிருக்கணும்! அவகிட்ட இப்படிப் போட்டுக் குடுத்திருக்கக் கூடாது!" என்று கத்தினேன்.

"நான் செய்யறது தப்

புன்னா, அதைக் கண்டிக்க நீ நினைச்சா, என்கிட்ட நேர கண்டிக்கற தைரியம் வேணும். இப்படி அண்டர்கிரவுண்ட் வேலை செய்யக் கூடாது'' என்று தொடர்ந்து இரைந்தேன்.

"டேய், ரொம்ப புத்திசாலித்தனமா பேசறதா நினைப்பா, நிறுத்துடா'' என்று அதட்டலாய் ரகுவின் குரல் குறுக்கிட்டது.

''ஆமாண்டா, எப்படி அவகிட்ட சொல்லலாம்? காயத்ரிகிட்ட இதச் சொல்றதுக்கு நீ யார்றா?'' என்று மேலும் கத்தினை என்னிடம், "நானா..." என்று கேள்வியாய் சற்று நிறுத்தினான். "உன் மனசாட்சிடா.. போடா முட்டாள்'' என்று சொல்லியபடி போனைத் துண்டித்து விட்டான்.

தவறு செய்தவனின் உறுத்தலும், திருட்டுத்தனம் வெளியானவனின் பரிதவிப்புமாய் வீட்டின் உள்ளே நுழைந்த எனக்கு காயத்ரியின் முகத்தைப் பார்க்கவும் அச்சமாயிருந்தது. இப்படிப்பட்ட பயம், சபலத்தின் உடன்பிறப்பு.

சஞ்சலமான நினைவுகளில் சட்டையைக் கழற்றி மாட்டினேன். இவள் ஏதாவது பேசி விடுவாளோ என்ற நினைவு கலவரமாய் தொண்டைக்குள் திரண்டது.

அந்தக் கலவரத்திற்கு முந்தைய மௌனம் எனக்குள் முழுவதுமாய் நிறைந்தது.

தூங்கிக் கொண்டிருக்கிற பாப்பாவை எழுப்ப மனமில்லாமல் குளிக்கச் சென்றேன். காயத்ரி ஏதும் பேசாமல் இருந்தாள்.

குளித்து விட்டு வந்தவுடன், வழக்கம் போல், "சாப்பிட வரீங்களா'' என்றாள்.

''உம்''

அப்பாடா!

எதுவும் கேட்காமலே பரிமாறி முடித்தாள்.

ஏதும் பேசாமலே சாப்பிட்டு முடித்தேன்.

இந்த மௌனம் அங்கிகாரமா, அலட்சியமா? அல்லது இது ஆயத்தமா?

ஆபீஸ் செல்லப் பிடிக்கவில்லை. வீட்டில் இருக்க முடியவில்லை. வெளியில் போக விரும்பவில்லை.

அதன் பிறகு அவள் ஏதோ பூஜை செய்து கொண்டிருந்தாள்.

பாபம் கற்பனையில் இருப்பதை விட, உண்மையாய் ஆகிற போது பெருகுகிற கொந்தளிப்பாய் படுக்கையிலேயே படுத்துக் கொண்டிருந்தேன்.



ஒருநாள் கழிந்தது. மறுநாளும் இப்படியே பெரிய பாரமாய் கரைந்தது. அவளது பேச்சுக்கள் மௌனமாகவே இருப்பதாய் தோன்றியது. ஆனால், இது ஒருவிதத்தில் சௌகரியம். இந்த மவுனம் யார் ஆரம்பித்தது என்று இப்போது எனக்கே புரியவில்லை.

அவள் சாதாரணமாய் இருப்பதாகவே பட்டது. அதே சமையல், சாப்பிட அழைப்பு, பூஜை. நான் தான் இறுகியிருக்கிறேன் என்று தோன்றியது.

உறுத்தலில் இருக்கும் என்னை சண்டை போட்டு காயப்படுத்துவதை விட, இந்த மவுனம் எனக்கு அனுகூலமா, கையாலாகாத அங்கீகாரமா என்று புரியவில்லை. இருந்தாலும், அவளுக்கு என்கிட்ட நேருக்கு நேர் இது விஷயமாக மோத ஒரு தயக்கம், பயம் கூட இருப்பதாய்த் தோன்றியது.

என்றாலும், இந்த இரண்டாவது நாளும் மவுனம் தொடர்வது என்னைக் கொல்லுவதாய் இருக்கிறது. அவள் முகத்தில் ஏதோ ஒரு அசாதாரண சோர்வு அப்பிக் கிடந்தது.

என் மனசாட்சி என்னைச் சரணடையச் சொல்லும் வேளையில், இவளது மவுனம் பலவீனமா, ஆணவமா என்று சந்தேகத்தின் அலைக்கழிப்பு.

இந்த மவுனம் வரவேற்புக் கதவு இல்லை என்பது நிச்சயம். ஆனால் வெளியேற்றக் கதவும் இல்லை. இது ஒருவகை குரூரமான சித்திரவதை. இந்த வீட்டுச் சிறைவாச மவு

ணத்தை மாற்றியாக வேண்டும்.

**பா**ப்பாவுடன் பக்கத்து வீட்டு சந்திரா ஏதோ விளையாடிக் கொண்டிருந் தாள். வாசல் மாடத்தில் விளக்கை ஏற்றி விட்டு, உம்மென்று சோர்வாய் வந்து உட் கார்ந்த காயத்ரியிடம் சென்று நின்றேன். இரண்டு நாளில் அவள் ஏதோ ரொம்பவும் இளைத்து விட்டது போல் தோன்றியது. கண்களைச் சுற்றிக் கருவட்டம். நெருங்கி வந்து நின்ற என்னை, உட்கார்ந்திருந்தவள் அண்ணாந்து ஏறிட்டாள்.

"காயத்ரி" என்றேன் மெதுவாய், ஆனால் உறுதியான தொனியில்.

"உம்" என்று முனகலாய் தலையைக் குனிந்தவாறு எழுந்து நின்றாள்.

அவளது முகத்தில் ஜிவ்வென்று ஒரு சிவப்பு. தேகம் நடுங்கிக் கொண்டிருப்பது புரிகிறது. ஏதோ பேச வருகிறாள் என்பது புரிகிறது. ஆனால் பேச முடியாமல் ஒரு நடுக்கம் என்பதும் தெரிகிறது.

"காயத்ரி" என்று அவளை மெல்லத் தொட்டேன். சரேலென்று கையை உதறிக் கொண்டு சற்றே விலகினாள். பக்கத்தில் இருந்த தூணைப் பிடித்துக் கொண்டாள்.

"சாப்டியா" என்றேன். ஏனோ அதைக் கேட்க வேண்டும் போல் இருந்தது.

"ம்?" என்று கேள்விக்குறியாய் கேட்டு லேசாகத் தலையாட்டினாள். பதறினேன், "ஏம்மா?"

"ம்?" என்று கேள்வியாய் கண்நிமிர்ந் தவள் அப்படியே சற்று நேரம் நின்றாள்.

"நேத்திக்கு சாப்டியா?" என்றேன். ஏன் இப்படிக் கேட்கிறேன் என்று புரியவில்லை. என் குரலில் ஏதோ ஒரு நடுக்கம் பரவுவதாய் இருக்கிறது.

"அது ஒண்ணும் முக்கியமில்லே" என்ற அவள் மெல்லிய குரல், பளார் பளார் என்று என்னை அறைந்தது.

"ஏன்" என்ற என் குரல் வினோதக் கரகரப்பாய் உடைந்தது.

"தப்பு நா செய்தேன்னா, நேருக்கு நேர் கண்டிக்கற தைரியம் வேணும், இது என்ன மிரட்டல்?" என்றேன். பேசும் போதே உக்கிரமான என் உளறல் புரிந்தாலும், நிறுத்த முடியவில்லை.

அவள் பரிதாபமாய் என்னைப் பார்த்தாள். கெஞ்சுதலும் இரக்கமும் சோர்வும் பலவீனமும் ஆன கலவையாய் அந்தப் பார்வை என்னை மேலே பேச முடி யாமல் தடுத்தது.

"ஏன்னா, நான் ஒரு பாபம் பண்ணிட் டேன்" - சற்றே கரகரப்பாய் உடைந்த அவளது குரல் தணிந்து நின்றது. இருள்

# வாண்டுமாமா

வண்ணச் சித்திரத் தொ

# ரத்தினபுரி ரகசியம்

சித்திரம் : செல்லம்



படிந்த முகத்தில் பிரகாசமான குங்குமம். லேசான மூச்சின் ஓசை. வெளுத்துக் கிடந்த உதடுகளிலிருந்து வந்த பலவீனமாய் நடுங் கும் குரலில் சன்னமான வார்த்தைகள் என் னைப் பின்னுவது போல் சூழ்ந்தன.

"நானே விபசாரம் போன மாதிரி ஒரு பாபம் ஆயிடுத்து, அதனால..." என்று தடு மாறி, மேலே தொடராமல் தடுமாறித் தவித்த அவள் வார்த்தைகளை முடிக்கும் முன்பாக, அந்த வார்த்தைகள் என்னைத் தலைகுப்புற அடித்த தாக்குதலின் மின்னல் கண நேரத்தில் நான் நிலைகுலைந்த வார்த் தையாய், "காயத்ரி" என்ற என் பதட்டமான அதட்டலைக் கலக்க, அவள் அப்படியே என் காலடியில் மயங்கி விழுந்தாள்.

**"நா**னே விபசாரம் பண்ணின மாதிரி" - காயத்ரியின் வார்த்தை ஊமையாய்க் கொந்தளிக்கிறது.

அந்தக் கொந்தளிப்பின் நாராச ஓலமாய் ஆட்டோ தடதடத்துச் சீறிக் கொண்டிருக் கிறது.

ஒரு மனைவி கணவனிடம் சொல்லி விட்ட வார்த்தைகள்... அந்த வார்த்தைகளின் எல்லையில் மௌனமாய் சலனமிழந்து விட்ட காயத்ரி.

என் தோள் மீது சாய்ந்திருக்கும் அவள் முகத்தில் சஞ்சல இழையாய் கலைந்தோடிய கேசங்களை ஒதுக்கி விட்டேன்.

இதமாய் அவள் முதுகை வருடி, சற்றே கண்திறக்கும் அந்த முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

அவளுக்கு ஏதாவது ஆகி விட்டால்...

காயத்ரி... காயத்ரி... உன்னிடம் பேசியே தீர வேண்டும். பேசுவதற்கு என்ன இருக்கிறது. மன்னிப்பு கேட்க வேண்டும். கேட்காமலே மன்னிப்பு தந்த பிறகு, எதற்காகக் கேட்பது?

நான் பாபம் செய்தவனாகவும், அவள் பரிகாரமாகவும் ஆகி விட்ட இந்த நேரத்திலும் 'அந்த' ராத்திரி முகம் வந்து போனது.

'காயத்ரி' - அவள் காதில் மெல்லக் கிசுகிசுப்பாய் கூப்பிட்டேன். ம்ஹூம்... ஆட்டோ டிரைவர் பார்க்கிறானா என்று நோட்டமிட்டபடியே என் கன்னத்தில் சூடாய் ஓடிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டேன்.

தானாகவே தந்த அவளுடைய மன்னிப்பானது, என்னைப் போல் பாபம் செய்தவனை, மன்னிப்பு கேட்கவும் அருகதையில்லாதவனாய் ஆக்கி விட்டது.

எனக்கு தேவை இப்போது - இந்தக் கணத்தில் என் தேவையெல்லாம் ஒன்றே ஒன்றுதான் காயத்ரி... என் காயத்ரி...

அவள் கண்விழித்து ஒரே ஒரு பார்வை. உலர்ந்த உதட்டிலிருந்து ஒரே ஒரு 'உம்' போதும்.

ஆட்டோ நின்றது. நர்ஸிங்ஹோம்.

காத்திருந்தவர்களைப் புறக்கணித்து உள்ளே தாவினேன். யாரோ ஒருத்தரின் கண்ணுக்குள் டார்ச் லைட்டில் நோட்டமிட்டுக் கொண்டிருந்த டாக்டர் - என் நண்பன், என்னைச் சிரித்துப் பார்த்தபடி, "ஹாய், கிருஷ்ணா" என்றான்.

"வாடா, உட்கார்."

"ரங்கா" என்று அவன் கையைப் பிடித்துக் கொண்டேன்.

"டேய் டேய் என்னடா ஆச்சு?"

"ரங்கா, காயத்ரி... ஆட்டோல... சீரியஸ்" சொல்லியபடி எங்கோ நழுவி நான் கரைந்து போனேன். அப்படியே சரிந்தேன்.

"சரியான மடையன்" என்ற அவனது வார்த்தை எங்கோ தொலைவு போய் கரைந்த போது, கையில் அவன் போட்ட ஊசி சுருக் என்றது.

இனம்புரியாத அழுத்தமும், அது விலகிக் கொண்டிருக்கிற மாற்றமுமாய் கண் விழித்த போது, எதிரே நின்ற காயத்ரியின் புன்னகை "என்னங்க" என்ற போது, "மடையன்" என்றது, ரங்கராஜனின் சிரிப்பு.

"சாரிடா" என்றேன்.

"ஏண்டா, துணைக்கு வந்தவனை பேஷண்ட் பாத்துக்கறது இதுதாண்டா முதல் தடவை" என்றான் மறுபடியும் சிரிப்பாய்.

வெட்கத்துடன், கட்டிலிலிருந்து எழுந்து உட்கார்ந்தேன். என் வாயருகே குளுகோஸ் கரைத்த தம்ளரை நீட்டினாள். பேசாமல் அவளையே பார்த்தபடி பருகினேன்.

ஆஸ்பத்திரி வெறிச்சோடி இருந்தது.

"சரி வீட்டுக்குக் கிளம்பலாமா" என்றான்.

மூவரும் வெளியே வந்தோம். ஆட்டோவில் ஏறினோம்.

ஆட்டோவின் இதமான ஓசையைத் தவிர சில நிமிஷம் ஏதுமில்லை.

"டேய், உடம்பை பாதிக்கற அளவுக்கு மனசை கொதிக்க விடக் கூடாது. இத எத்தனையோ தடவ உனக்கு சொல்லியிருக்கேன்" என்று தோளைத் தட்டினான்.

இவனிடம் சொல்லியிருப்பாளோ என்று தோன்றியது. இருக்காது என்றும் தோன்றியது.

"காயத்ரி, இன்னுமே உனக்கு ஒடம்புக்கு வரதுக்கு முன்னால, இவனுக்கு வைத்தியம் பண்ணிடுவோம், அப்பதான் சரிவரும்.



"அந்தப் போலீஸ்காரரை மணமக்களை வாழ்த்தச் சொன்னது தப்பா போச்சு."

"ஏன், என்னாச்சு?"

"போலீசும், மாமூலும் போல இணை பிரியாம வாழணும்'னு வாழ்த்தறாரு!"

— டி.என். பாலகிருஷ்ணன்

சூப்பரான எஸ்கார்ட்" என்று சொல்லி விட்டு, ஹோஹோவென்று சிரித்தான்.

"ரங்கா, ஒரு விஷயம் கேக்க விட்டுப் போச்சு. காயத்ரிக்கு என்னடா ஆச்சு?" என்றேன் மெல்லிய குரலில், காயத்ரிக்குக் கேட்காதபடி. அவள் ஏற்கெனவே தூங்கிக் கொண்டிருந்தாள்.

"அதுவா, ஒன்னுமில்லை," என்றவன், "அவ நேத்திலேர்ந்து சாப்பிடாம இருந்திருக்கா. பயங்கரமான மெண்ட்டல் அகனி... ரெண்டுமா சேர்ந்து, கொஞ்சம் டீஹைட்ரேஷன், அட்ராஷியஸ் பலவீனமாகி... நல்ல வேளை, நீ வீட்டுல இருந்ததால உடனே கொண்டு வந்தே. இல்லைனா..."

"கடவுளே, ஏண்டா இப்படி?"

"கேட்டேன், என்னமோ மனசு சரியில்லையாம். வேண்டுதலாம். அதுக்காக விரதமாம், எல்லாம் அப்புறம் பேசிப்போம். இப்ப எல்லாம் நல்லா ஆயாச்சு. இந்த மாதிரி கடும் விரதமெல்லாம் சாமிய பயமுறுத் திடும்" என்று என் கன்னத்தை லேசாகத் தட்டினான்.

ரங்கராஜனிடம் இவள் சொல்லியிருந்தால் என்னவாகியிருக்கும். நல்லவேளை.

"கேட்டேன், என்னமோ மனசு சரியில்லையாம்" என்ற ரங்காவின் வார்த்தைகள்.

என்னைத் திரைபோட்டு விட்ட இந்த வார்த்தைகள் பெரிய ஆறுதல்.

நிலையில்லாத திரை. ஆனால் நிம்மதியான காவல். அவமானம் பரவாத தடை.

மௌனமாய் வீடு வந்தது. ரங்கா விடைபெற்றுப் போனான்.

ஹாலில் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையை கலைக்காமல் சப்தமின்றி நகர்ந்தோம்.

செல்கின்ற அறைகளுக்குள் வெளிச்சத்தை ஸ்விட்ச் தட்டியபடி காயத்ரி உள்ளே நுழைந்தாள். சமையலறையின் சாமி படங்களுக்கு முன்பு நின்றாள்.

விளக்கை ஏற்றிக் கைகூப்பிக் கண்மூடி நின்றாள்.

பக்கத்தில் வந்து நின்ற என் மூச்சுக் காற்றில் சற்றே கலைந்து, மென்மையாய் என் பக்கம் திரும்பினாள்.

அவளிடம் எனக்கு என்ன பேசுவதென்றே தெரியவில்லை.

காயத்ரியும் என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

கூப்பிய கரம், பிரியாமல் தீபம் போல் நிமிர்ந்து நின்றிருந்தது. அதிலே பலவீன நடுக்கம். வைராக்ய உறுதி. உள்ளத்தின் கனலிலே உருகிய அவள் நினைவுகள் கண்களில் கண்ணீராய்த் திரண்டன.

"காயத்ரி" என்றேன்.

"உம்?"

மேலே எனக்கு என்ன சுந்தரகாண்டம் பேசுவது என்று தெரியவில்லை. அவளாக ஏதாவது கேட்க மாட்டாளா?

வெளியில் தெரியாதவரையில் எதுவுமே தப்பு இல்லை என்பது எப்படிப்பட்ட மட்டமான நினைப்பு என்று அருவருப்பாய் இருந்தது.

"தப்பு செஞ்சது நான். அதுக்கு நீ ஏன்... இப்படி... விரதம்... பட்டினி... கொஞ்சம் பிசகியிருந்தா என்னாயிருக்கும்... காயத்ரி... ஏன் இப்படி..." - என்று தட்டுத் தடுமாறினேன்.

"ஏன்னா" என்றாள் கிசுகிசுப்பாய். என் முகத்தருகே தன் முகத்தைக் கொண்டு வந்தாள். எல்லாவித சலனங்களையும் தாண்டின கனிவான முகம் என் மனதிடம் பேசுவதைப் போலப் பார்த்தாள்.

"ஏன்னா, நீங்க செய்தாலும், நான் செய்தாலும், எல்லாம் ஒன்னுதான். நீங்க வேற, நான் வேறா?"

சுளீர் என்று என்னை யாரோ நொறுக்கித் தள்ளியது போலிருந்தது. அப்படியே காப்பாற்றி அணைத்துக் கொள்வதாயும் இருந்தது.

"அது நானே மோசம் போன மாதிரி, நானே ஆன மாதிரி" என்று அழுத்தமாய் சொல்லி, தடைபட்ட வார்த்தைகளின் விசும்பலுடன் கண்ணீரால் கண்களை மூடினாள்.

அப்படியே அவள் தோள்களைப் பிடித்து அணைத்து என் மார்பில் சாய்த்துக் கொண்டேன்.

உருகிய என் கண்களின் கண்ணீர்த் துளி அவள் தலையில் விழுந்தது. சுவாமியின் முன் விளக்கின் ஜோதி பிரகாசமாய் அலைந்து திரண்டது.

# நினைவலைகள்

## 24

**கே.பாலசந்தர்**

IN CINEMA EACH WORD, EACH LOOK, EACH MOVEMENT, HAS THINGS UNDER LYING.

\- ROBERT BRESSON

நல்ல ஆரம்பம் பாதி வெற்றிக்கு சமம் என்பார்கள். எதையாவது சாதிக்க வேண்டுமென்று எண்ணம் கொண்டு எத்தனையோ பேர் பல தரப்பட்ட முயற்சிகளில் ஈடுபடுகிறார்கள். சிலருக்கு எடுத்த எடுப்பிலேயே இமாலய வெற்றி கிடைக்கிறது; குன்றளவு கூட வளர்ச்சி பெற முடியாதோர் ஆர்வம் குன்றி விரக்தியின் எல்லைக்குச் சென்று வாழ்க்கையை வீணடித்துக் கொள்கிறார்கள். ஒவ்வொரு மனிதனும் நல்ல ஆரம்பத்தையே எதிர்நோக்கி நிற்கிறான். சமுதாயத்தில் தன்னை இனம்காட்டிக் கொள்ள அவன் மேற்கொள்ளும் முயற்சிகள்தான் எத்தனை விதமானவை!

கலையுலகில் பிரவேசித்திட வேண்டுமென்ற இளநெஞ்சங்களின் துடிப்பை அலைகளுக்குத்தான் ஒப்பிட வேண்டும்! அலைகளும் ஓய்வதில்லை; அவர்களும் ஓய்வதில்லை!

திரைப்படங்களில் நடிக்க வேண்டுமென்கிற ஆர்வத்திலும் வெறியிலும் எத்தனையோ இயக்குநர்களைச் சந்தித்தவர்கள் என் மீதும் தடுக்கி விழுந்திருக்கிறார்கள். அப்படி என் மீது விழுந்தவர்கள் எத்தனையோ பேர் எழுந்து நின்றிருக்கிறார்கள். இன்று புகழேணியின் உச்சியில் கூடச் சிலர் நிற்கிறார்கள்.

புதுமுக நடிகர் நடிகையர் பல பேரோடு நான் பணிபுரிந்திருக்கிறேன்.

புதுமுகங்களை எப்படி **நடிக்க வைப்பது** என்று எனக்குக் கற்றுத் தந்தவர்களே அவர்கள்தான் என்று சொன்னால் அது மிகையாகுமா?

**1975**-ஆம் ஆண்டு என்று நினைக்கிறேன்.

தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபை ஒரு நடிப்புப் பயிற்சிக் கல்லூரி நடத்திக் கொண்டிருந்தது. தமிழ் பிரிவின் **practical test**ற்கு நான் ஒருநாள் நடுவராகச் சென்றிருந்தேன்.

இந்தப் பணி முடிவடைந்த பிறகு அங்கே விரிவுரையாளராகவும் பயிற்சியாளராகவும் பணிபுரிந்து கொண்டிருந்த எனது நண்பர் கோபாலி அவர்களுடன் வர்த்தக சபை வளாகத்தில் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தேன். சற்றுத் தள்ளி கன்னடப் பிரிவைச் சேர்ந்த மாணவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களிலே ஒருவர் என் கவனத்தை மிகவும் கவர்ந்தார்.

கறுமையான முகம்; நல்ல மூக்கு, **chiseled face!**

அந்தப் பையன் யார் என்று கோபாலியிடம் கேட்டேன்.

''அவர் பெயர் சிவாஜி ராவ்; கன்னடப் பிரிவு மாணவன்... அவர் கூட உங்களைச் சந்திக்க வேண்டுமென்று சொன்னார். கொஞ்சம் இருங்கள்'' என்று என்னிடம் கூறி விட்டு சிவாஜி ராவை சைகை செய்து அருகில் வரச் சொன்னார் கோபாலி.

அந்த நேரத்தில் நான் சிவாஜி ராவ் முகத்தில் பார்த்தது அசாத்தியமான ஒரு ஒளி!

அதை எப்படி என்று வர்ணிக்கத் தெரியவில்லை.

"எந்த வேடமாக இருந்தாலும் உங்கள் படத்தில் நடிக்க வேண்டுமென்று இவர் ஆசைப்படுகிறார்'' என்று கோபாலி சொன்னார்.

"தமிழ் பேசத் தெரியுமா?'' என்று கேட்டேன்.

"சுமாராகப் பேச முடியும்!'' என்றார்.

அசுரத்தனமான ஒரு தன்னம்பிக்கையின் வெளிப்பாடு அந்த முகத்தில் தெரிந்தது.

"சந்தர்ப்பம் வரும் போது பயன்படுத்திக் கொள்கிறேன்" என்று சொல்லி அவரை அனுப்பி விட்டு நான் கோபாலியிடம் சொன்னேன் :

"இந்த ஆளின் **features** எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. முகத்திலே ஒரு **fire** தெரிகிறது. நிச்சயம் உபயோகப்படுத்திக் கொள்கிறேன். ஆனால் எப்போது என்று சொல்ல முடிய வில்லை!" என்று நான் சொல்ல,

"முகம்தான் கறுப்பே தவிர நடிப்பு கற்றுக் கொள்வதில் மிகுந்த ஆர்வம் உள்ளவராக இருக்கிறார்" என்று கோபாலி சொன்னார்.

நான் சொன்னேன் :

அந்தக் கறுமை நிறம்தான் அவருடைய **strong point.** ஏனென்றால் பெரும்பாலான நமது மக்களை அவர் தனது கறுப்பு நிறத் தின் மூலம் பிரதிபலிக்கிறார். **He represents our masses** என்று சொல்லி விட்டுப் போய் விட்டேன்.

சில நாட்கள் கழித்து, சிவாஜி ராவை கலாகேந்திரா அலுவலகத்திற்கு வரவழைத் தேன்.

"நான் எடுக்கவிருக்கும் 'அபூர்வ ராகங் கள்' என்கிற திரைப்படத்தில் ஒரு சின்ன வேடம் இருக்கிறது. ஏழெட்டு காட்சிகள் தான் வரும். ஆனாலும் 'யார் இந்தப் பையன்' என்று கேட்கிற மாதிரி இருக்கும். இந்தப் பாத்திரத்தில் முதலில் நடியுங்கள். அடுத்த படத்தில் நல்ல பெரிய ரோலாகத் தரு கிறேன்" என்றேன்.

ஒரு சின்ன காட்சியை **mono acting** ஆகச் செய்து காட்டினார்.

ஏதோ பேச வேண்டுமென்பதற்காகவோ என்னவோ என்னிடம் ஒரு கேள்வி கேட் டார்.

"ஒரு நடிகன் எப்படி இருக்க வேண்டு மென்று நீங்கள் நினைக்கிறீர்கள்?"

இந்தக் கேள்வியை ரஜினி பாணியில் எப்படிக் கேட்டிருப்பார் என்று நீங்கள் கற் பனை செய்து கொள்ளலாம்.

"ஒரு நடிகன் காமிரா முன்னால் மட்டும் தான் நடிக்க வேண்டும்; வெளியே நடிக்கக் கூடாது" - இது நான்.

ஸ்ரீவித்யாவின் கணவனாக 'அபூர்வ ராகங்கள்' படத்தில் அவர் நடித்ததுதான் அவருக்கு திரையுலகப் பிரவேசமும் அரங் கேற்றமும்.

1975 ஆகஸ்ட் மாத பேசும் படம் இதழில் "அபூர்வ ராகங்கள் - அபூர்வப் பாத்திரங் கள்" என்ற தலைப்பில் நண்பர் மதுரை தங்கம் ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அதற் காக கமலஹாசன், ஸ்ரீவித்யா, ஜெயசுதா, சுந்தரராஜன் ஆகியோரைப் பேட்டி கண்டு விட்டு, கடைசியாக இந்தப் படத்தைப் பற்றி என்னுடைய கருத்துக்களையும் கேட்க வந்திருந்தார் மதுரை தங்கம்.

"இந்தப் படத்தில் ஒரு சிறிய கேரக்டரில் அறிமுகமாகும் ஒரு புது முக நடிகரையும் பேட்டி கண்டு அவருடைய கருத்துக்களை யும் கட்டுரையில் சேர்த்துக் கொள்ளுங்கள்" என்று கூறினேன்.

அவருடைய கருத்துக்களும் அக் கட்டு ரையில் இடம்பெற்றிருந்தன.

என்னுடைய கருத்துக்களை நான் சொல் லும் போது, "இந்தப் படத்தில் அறிமுக மாகும் 'ரஜினிகாந்த்' என்கிற புதுமுகத்திடம் ஒரு மிகச் சிறந்த எதிர்காலத்தை என்னால் பார்க்க முடிகிறது" என்றும் சொல்லியிருந் தேன்.

"சிவாஜி என்கிற ஒரு நடிகருள் இமயம் நம்மிடையே இருக்கின்ற ஒரு காரணத் தினால் அவரது பெயரை ஒட்டியிருக்கிற உனது பெயரை மாற்றினால் நல்லது" என்று நான் சொல்ல... பெயர் மாற்றுகின்ற பொறுப்பை என்னிடமே விட்டு விட்டார் சிவாஜி ராவ்.

என்னுடைய 'மேஜர் சந்திரகாந்த்' நாடகத்தில் வருகின்ற மேஜரின் மகன் 'ஸ்ரீகாந்த்' என்கிற பெயர் திரைக்கு அறிமுக மாகும் போது, நடிகர் ஸ்ரீகாந்துக்கு வைக்கப் பட்டது. ஸ்ரீகாந்த் கேரக்டரின் தம்பியாக வரும் 'ரஜினிகாந்த்' என்கிற கேரக்டரின் பெயரை நான் சிவாஜிராவிடம் சிபாரிசு செய்தேன். அந்தப் பெயர் அவருக்கும் பிடித்துப் போய் விட்டது.

தமிழகத்தில் அந்தப் பெயர் எப்படி நிலைத்துப் போய் விட்டது என்பதெல்லாம் சரித்திரம்.

அடுத்து :

'மூன்று முடிச்சு' படத்தில் ஆரம்பத்தி லிருந்து இறுதி வரை வரும் ஒரு குணசித்திர வில்லன் வேடம். அந்தப் படத்தில் கமலஹா சன் கதாபாத்திரம் கூட இடை வேளை யோடு முடிந்து போகும்.

ஏற்காடு மலையில் படப்பிடிப்பு. எனது உதவியாளராக இருந்த சர்மா என்னிடம் வந்து சொன்னார்.

"நம்ம 'ரஜினிகாந்த்' சிகரெட்டை ஸ்டை லாகத் தூக்கிப் போட்டு வாயாலே கவ்விக் கொள்கிறார். பார்ப்பதற்கு ரொம்பவும் சுவா ரஸ்யமாக இருக்கிறது. அதை நீங்கள் பார்க்க வேண்டும்" என்று சொல்லி ரஜினியை என் னிடம் அழைத்து வந்து அந்த **action**ஐ என் முன்னால் செய்யச் சொன்னார்.

சினிமாத் துறையைப் பொறுத்தவரையில் 'சிகரெட்' டைக் கையாள்வது என்பது ஒரு அவமரியாதை **symbol.** அதனால்தானோ என்னவோ முதலில் எனக்கு நேராக அவர் செய்து காட்டத் தயங்கினாலும் சற்று

தயக்கத்தோடு பின்னால் ஒப்புக் கொண்டு என் முன் அந்த actionஐ செய்து காட்டினார்.

நான் அசந்து போனேன்!

"இதை முன்னாலேயே என்னிடம் நீ செய்து காட்டியிருந்தால் இந்த வில்லன் கேரக்டருக்குப் பொருத்தமாக இந்த actionஐ எல்லாக் காட்சிகளிலும் வைத்திருப்பேனே!" என்றேன்.

ஆனாலும் அப்பொழுதும் ஒன்றும் கெட்டுப் போய்விடவில்லை. எடுக்க வேண்டிய மீதியுள்ள காட்சிகளில் இந்த mannerism பயன்படுத்திக் கொள்வது என்று முடிவெடுத்தேன்.



• லாவகம், நூதனம், தனித்தன்மை!

இந்த action நிச்சயமாக மக்களிடமிருந்து அபரிமிதமான கைத்தட்டலைப் பெற்றுத் தரும் என்று நான் நினைத்தேன். இதைப் படம்பிடிப்பதற்காகவே slow motion'காமிராவை சென்னையிலிருந்து மறுநாளே வரவழைத்தேன்.

அதாவது சட்டென்று ஒரு விநாடிக்குள் ஆரம்பித்து முடிந்து விடும் இந்தச் செயல் 'Slow Motion' காமிராவில் எடுக்கும் போது மூன்று விநாடி நேரத்திற்கு அதே செயலை நீட்டிக் கொள்ள முடியும். இதனால் அந்த styleம் லாவகமும் மக்கள் மனத்தில் இன்னமும் அதிகமாகப் பதிவாகும்.

இதிலே ஆரம்பித்ததுதான் ரஜினி ஸ்டைல். படம் வெளியான பிறகு சென்னையிலிருந்து கன்னியாகுமரி வரை அனைத்துத் தரப்பு ரசிகர்களுக்கும் இது பிடித்துப் போய் விட்டது. மிகப் பெரிய அளவில் ஒரு சிறந்த வில்லனாக தமிழக ரசிகப் பெருமக்கள் மத்தியில் ஒரு அங்கீகாரம் கிடைத்தது.

**Over night stardom.**

'மூன்று முடிச்சு' திரைப்படம் வெளியாகி நான்கு வாரங்கள் கழித்து இன்னொரு சினிமா சம்பந்தப்பட்ட விழாவில் கலந்து கொள்ள ரஜினி மதுரை சென்ற போது, அவர் காரிலிருந்து இறங்கியதிலிருந்து விழா மேடை வரை ரசிகப் பெருமக்கள் அவரை தூக்கிக் கொண்டே போய் விட்டார்களாம்.

ரஜினிகாந்த் தனது ஜனரஞ்சக popularityஐ நேரிடையாக உணர்ந்த முதல் சம்பவம் இது தான். மதுரையிலிருந்து திரும்பியதும் என்னைச் சந்தித்து ஆனந்தக் கண்ணீருடன் தனது அனுபவத்தை விளக்கமாகச் சொன்னார் ரஜினி.

"டெலிபோனில் பேசி விட்டு ரீசிவரை டெலிபோன் மீது வைக்கும் ஒரு சாதாரண செயலைக் கூட, ஒரு சின்ன தீப்பொறி, ஒரு சின்ன நூதனம், அதிலே ஒரு உயிரோட்டம் இல்லாமல் இவரால் செய்ய முடியாது" என்று James Cagney என்கிற நடிகரைப் பற்றி ஒரு திரைப் பிரமுகர் சொல்லி யிருக்கிறார். இது முழுக்க முழுக்க 'ரஜினிகாந்த்' என்கிற இந்தக் கலைஞனுக்கும் பொருந்தும்.

நினைத்துப் பாருங்கள்!

நெற்றிக் கண் படத்தில் கண்ணாடியை ஒரு சுழற்றுச் சுழற்றி மாட்டிக் கொள்கின்ற அந்த லாவகத்திலாகட்டும், 'எஜமான்' படத்தில் டவலைத் தோள் மீது போட்டுக் கொள்கின்ற செயலில் உள்ள நூதனமாகட்டும், ஒரு தனித்தன்மையைப் புகுத்தி ரசிகர்களைத் தன்வசம் சுண்டி இழுக்கின்ற அந்தத் திறமை இவர் ஒருவருக்கே கைவந்த கலை.

**He can do nothing which is not worth watching.**

இப்படிப்பட்ட சின்னச் சின்ன முத்திரைகளை சிலர் stylised acting என்றும் ஒருசிலர் இதை gimmicks என்றும் ஆரம்ப காலத்தில் குறைபட்டுக் கொண்டாலும், அது 'ரஜினி ஸ்டைல்' என்று மக்களால் போற்றப்படுகின்ற காலக்கட்டத்தில், இவர்களும் ரஜினியின் தனித்தன்மையை ஒப்புக் கொள்ள வேண்டி வந்து விட்டது! ஏனெனில் மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு அல்லவா?

என்னுடைய சிங்கப்பூர் நண்பர் ஒருவர் சொன்னார்:

"உலகமெங்கிலும் உள்ள தமிழர்களின் ஒட்டுமொத்தமான ஒரு பிரதிபிம்பத்தை ரஜினியின் முகத்திலே பார்க்க முடிகிறது" என்று.

இந்த ஸ்டேட்மெண்டில்தான் எத்தனை உண்மையிருக்கிறது என்று எண்ணிப் பார்த்தேன். நான் ஆச்சர்யப்பட்டேன்!

ஏனெனில்...

வில்லியம் ஹோல்டன் என்கிற நடிகரின் சிறப்பு பற்றி ஒரு பிரமுகர் சொல்லியிருக்கிறார்:

**When you look at him, the map of the United States is right there on his face.**

(தொடரும்)

